வெளியீடு எண் 586.

உ

சிவமயம்

# திருமுறை கண்ட புராணம்

(உமாபதி சிவாசாரியர்)

முதலிய

# திருநூல் ஐந்து

[குறிப்புரையுடன்]

தருமையாதீனம்

1967



தருமையாதீனம் 24 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

24 ஆவது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

18—5—1967

வெளியீடு எண். 583.

உ
சிவமயம்

# திருமுறை கண்ட புராணம்

(உமாபதி சிவாசாரியர்)

முதலிய

# திருநூல் ஐந்து

[ குறிப்புரையுடன் ]

இது

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

25 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

அருளாணைப்படி வெளியிடப்பெற்றது.

விலை ரூ. 1·50

தருமையாதீனம்

18—5—1967

[ பிலவங்கஹு - வைகாசிமீ - 4 ஆம் நாள் ]

உ

சிவமயம்

# நூன்முகம்

" சண்முகக் குரவன் சாற்றும் திருவடி
உண்முக மாகவே நாடின்
மண்முகப் பிறப்பிலே மாண்புவீ டெளிதே "

உயிர், இறை, உலகம் என்ற முப்பொருள் உண்மையைச் சிறப்புற உடையது சித்தாந்தச் செந்நெறி. உயிர் உலகத்தளையினின்றும் வீடுபட்டு இறையடி சேர்தல் வேண்டும் என்ற சிறப்புக் கொள்கையை மறுப்பார் யார்? எல்லாச் சமயங்கட்கும் ஒத்த முடிபாகவே உள்ளது சைவ சமயக் கோட்பாடு என்பது அறிந்துணரத் தக்க அரும் பேருண்மையாகும். இத்தகு உயிர் கொண்டொழுகும் நெறிமுறைகள் பல, அவற்றை நான்கு நெறிகளாகச் சைவம் சாற்றுகின்றது. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன,

தமிழகத்தே வாழ்ந்து சிறந்ததிருத்தொண்டர் பலரும் இந்நான்கு நெறியில் நின்று உயர்ந்தவர்களே யாவர்; குரு, லிங்க, சங்கமம் என்னும் மூவகைப் பக்தியில் தலை சிறந்து விளங்கிய இத்திருத்தொண்டர் பலரையும் தொகை மூலம் நம்பியாரூரரும், அந்தாதி வாயிலாக நம்பிகளும், புராணம் வழியாகச் சேக்கிழாரும், புராணசாரம் வழியாக

உமாபதி சிவாசாரியாரும் விளக்கியுள்ளனர். உமாபதி சிவாசாரியார் செய்த திருநூல் நான்கும், மற்றொரு பழம் பாடலும் ஆகத் " திருநூல் ஐந்து " என்ற தலைப்பில் ஒரு தொகுப்பு இச்சிறுநூல். இதன்கண் அமைந்த திருநூல் ஐந்து பற்றிய சில விவரங்கள் முதற்கண் அறியத்தக்கன.

### 1. திருமுறை கண்ட புராணம்:

இது உமாபதிசிவாசாரியாரால் செய்யப்பெற்றது. 45 திருவிருத்தங்களை உடையது, அருமையான செய்யுட்கள். கற்பனை முதலிய நலம் பல செறிந்தது. நம்பியாண்டார் நம்பிகள் வரலாறு, அவர் திருநாரையூர்ப் பிள்ளையார் அருள்பெற்றுச் சிவபாதசேகரனுகிய சோழ மன்னனுடன் திருமுறைகளை வகுத்தது. அவற்றிற்குத் திருவெருக்கத்தம்புலியூர்ப் பாணர் குலத்துப் பெண்மணியொருவர்வழிப் பண் வகுத்தது ஆகியன இதில் சுவையுறச் சொல்லப்பட்டுள்ளன. திருமுறைகளில் தேவாரத்தின் பெருமை கூறும் 17-வது பாடல் மனப்பாடம் செய்யத்தக்கது. இப்புராணம் திருமுறைப் பண்ணுராய்ச்சிக்கும் திருமுறை தொகுத்த காலவாராய்ச்சிக்கும் பெருந்துணை புரிதலைத் தமிழுலகம் நன்கறியும்.

### 2, திருத்தொண்டர் புராண சாரம்:

தெளிவான 78 செய்யுட்களால் நாயன்மார் வரலாற்றை நலம்பெறப் பாடும் நூல், திருத்தொண்டர் புராண வரலாறு முழுதும், மிகச் சுருக்கமாகத் திட்ப நுட்பம் பொருந்த இலக்கணச் சூத்திரம் போன்று இதன் ஒவ்வொரு பாடலிலும் செறிக்கப்பெற்றுள்ளன. இதன்

இறுதிப்பாடலில், 'அருட்புலியூர் உமாபதியார் அருள் செய்தாரே' எனவருவதால் நூலாசிரியர் பெயர் விளக்க மாகிறது. அடைமொழிச் சிறப்பு இந்நூலின் பல சிறப்புக் களுள் ஒன்றாகும். 'தலைவன் வலிய ஆண்ட ஆரூரர்' (76) அமண்சமயம் சாடவல்ல சைவ சிகாமணி (71) 'மாற்றருமன்பில் திலகவதி' (24) முதலியன காணலாம்.

### 3. திருப்பதிகக் கோவை;

இது 14 பாடல்களில் திருப்பதிகங்கள் அனைத்தையும் கோவைப்படுத்திய திருநூல். இன்னின்ன திருத்தலங்கள் இத்தனை இத்தனை பதிகங்கள் பெற்றவை என்று நினைவிற் கொள்ள இதனினும் உறுதுணை வேறில்லை.

### 4. திருப்பதிக் கோவை :

இதுவும் 14 பாடல்களால் இயன்றுள்ள திருநூல். பாடல்பெற்ற பதிகளனைத்தையும் பெயர் கூறவே பெரும் பயன் உண்டாமாதலின் இதனை அன்றாட வழிபாட்டிற் கூறுவோர் நற்பயன் பெறல் திண்ணம். "வினைகள் சாரா; பிறப்பு நீங்கும்; முத்தியும் சத்தியம்" (14) என வருவது இதன் பயனைத் தெளிவாக்கும்.

### 5. அறுபத்துமூன்று நாயன்மார் திருநட்சத்திரம் :

இஃது ஓர் இன்றியமையாத தொகுப்புத் திருநூல். ஒரே பாட்டான் 78 வரிகளில் இயன்ற நூல். இன்னின்ன திருத்தொண்டர்கள் இன்னின்ன திருநட்சத்திரம் கூடிய நன்னாளில் இறையடி சேர்ந்தார்கள் என்றறியத் துணை நிற்கும் இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியப்படவில்லை.

இத்திருநூல் ஐந்தில் திருமுறைகள் பற்றியன மூன்று: திருத்தொண்டர்களைப் பற்றியன இரண்டு. இவற்றைச் சுருக்கமான குறிப்புரையுடன் தருமையாதீனம் 24 ஆவது குருமூர்த்திகளாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் 22-வது ஆண்டு குருபூஜை விழாவன்று (18—5—67) விழா மலராக வெளிவரப் பணித்தருளினார்கள், தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்.

அவ்வாறே சந்தி முதலியன பிரிக்கப்பெற்று, கற்போர்க்குத் துணை நிற்பக் குறிப்புரையும் ஆங்காங்குக் காட்டப்பெற்று இவ் விழாமலராக வெளிவருகிறது இத் "திருநூல் ஐந்து". பாடல் முதற் குறிப்பகராதியும் நூலின் இறுதியில் இணைக்கப்பெற்றுள்ளது.

எளியேனுக்கும் இச் சிவபுண்ணியப் பெரும்பணியில் பங்கு அருளிய எங்கள் பரமாசாரியப் பெருந்தகை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள் திருவடிகளை மனமொழி மெய்களாற் பணிகின்றேன்.

"கயிலைக் குருமணிதாள் கைதொழுதே நெஞ்சின்
மயலையறுத் துய்வேம் மகிழ்ந்து"

அடியேன்,

தருமபுரம், 16—5—67.

வித்துவான், சோ. சிங்காரவேலன், எம். ஏ.,
முதல்வர்,
ஆதீனக் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருமுறைகண்ட புராணம்

கருமுறை விண்டடி யவருயு மாறருள்
 கவுணியர் குலதீபம்
தருமிறை நாவுக் கரசா ரூரர்
 தாம்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச்
 சிந்துர முகன் நற்றாள்
ஒருமுறை இருமுறை மும்முறை வாழ்த்தி
 உவந்தன் பொடுபணிவாம்.

## குறிப்புரை

கடவுள் வாழ்த்து: கவுணியர் குலதீபம் - கவுணியர் குலத்து அவதரித்த விளக்குப் போல்வாராகிய திருஞான சம்பந்தர். சிந்துரம் - ஆனை. நற்றாள் - பிறவிப் பிணி யறுக்கும் நன்மை உடைய திருவடிகள்.

வேறு

உலகமகிழ் தருசைய மீது தோன்றி
ஓவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின்
திலகமென விளங்குமணி மாடஆரூர்த்
தியாகேசர் பதம்பணிந்து செங்கோல்ஓச்சி
அலகில்புகழ் பெறுராச ராச மன்னன்
அபயகுல சேகரன்பால் எய்தும் அன்பர்
இலகும்ஒரு மூவரருள் பதிகம் ஒன்றென்
றேஇனிதின் உரைசெய்ய அன்பால் கேட்டு. 1

கையிரண்டும் உச்சிமேல் ஏறக் கண்ணீர்
கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப
ஐயன்மலர்ப் பதம்உளத்தே கொண்டு போற்றி
அரியமுறை தேடவெங்கும் இலாமை யாலே
நையுமனத் தினனாகி இருக்குங் காலை
நாரையூ ரினில்ஆதி சைவமறை யோன்பால்
வையமெலாம் ஈடேறச் சைவம் வாழ
மாமணிபோல் ஒருசிறுவன் வந்து தோன்றி. 2

வளமொடுஉப நயனவிதிச் சடங்கும் பூண்டு
மறைமுதலாம் கலைபயின்று வருநாள்ஈன்ற
கிளர்மறையோன் ஓரூர்க்குச் செல்ல மைந்தன்
கேடில்பிதா உரைத்தமொழிப் படியேஅந்தி

---

1. ஓவாது - நீங்காது. அலகு - அளவு.

2. கண்ணீர் ஓடலும், மெய்வ்விதிர்ப்பெய்தலும் சோழன் எய்திய பக்தி அநுபவநிலையை விளக்கின.

3. உபநயனச் சடங்கு - புரிநூலணியும் விழா.

இளமதிச்செஞ் சடைப்பொல்லாப் பிள்ளை யாரை
ஏத்திஆ ராதிப்பான் இனிதின்ஏகி
உளமலிஅன் பொடுதிருமஞ் சனமுன்னுகும்
உரியவெலாம் செய்துநிவே தனம்முன் வைத்து. 3

எம்பெருமான் அமுதுசெய வேண்டும்என்ன
இறைஞ்சிடவும் அமுதுசெயா திருப்பக் கண்டு
வெம்பியுளம் ஏதேனும் தவறிங் குண்டோ
வேழமுக னேஅடியேன் நிவேதித் திட்ட
பம்பமுதம் உண்ணாத தென்னை யென்னப்
பரிந்துதலை தனைமோதப் புகுங்கால் எம்மான்
நம்பிபொறு எனத்தடுத்தவ் வமுதம் எல்லாம்
நன்கருந்த உவந்துநம்பி நவில்வ தானன். 4

எந்தையே இனிஅடியேன் பள்ளிக்கு ஏகில்
எங்கள்தே சிகன்அடிப்பா னுதலாலே
சந்தமறை முதற்கலைகள் நீயேஓதித்
தரல்வேண்டும் எனவேழ முகத்தோன் ருனும்
மந்தமற ஓதுவிக்க ஓதிநம்பி
மகிழ்ந்தனன்அன் றதுபோல மற்றை நாளும்
விந்தையொடு நிகழநம்பி யாண்டார்நம்பி
மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா. 5

---

4. வெம்பி - வருந்தி. பம்பு - செறிதல்.

5. மந்தம் - அறியாமை; கேளா - கேட்டு. (செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்).

செல்வமிகு திருநாரை யூரின்மேவும்
　　சிவனளித்த மதகரிக்குச் சிந்தை கூர்ந்து
நல்லபுகழ் உடைய நம்பி யாண்டார்நம்பி
　　நண்பினெடு நிவேதிப்பான் மதுர மிக்க
எல்லையில்வா ழைக்கனிதேன் அவலோ டப்பம்
　　எள்ளுண்டை இவ்வுலகோர் எடுக்க என்றே
மல்லன்மிகு சேனையுடன் இராசராச
　　மன்னவனும் அந்நகரில் வந்து சேர்ந்தான். 6

ஆங்கதனுக்கு அந்நகரில் இடம்போ தாமல்
　　அயல்சூழப் பதின்காத அகல வெல்லை
மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும்
　　வந்தனஅவ் வெல்லையெலாம் மருவ வைத்துப்
பாங்கினுடன் நம்பிதாள் பணிந்து மன்னன்
　　பலகனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்து போற்றி
ஈங்கிதனைப் பொல்லாத பிள்ளை யாருக்கு
　　இப்பொழுதே நிவேதிக்க என்று சொன்னன். 7

நம்பியரசன்சொன்ன வார்த்தை கேளா
　　நன்றுஉனது பணியென்ன அருளா லுன்னித்
தும்பிமுகன் அடிபணிந்து மன்ன னிங்குத்
　　தொகுத்தனநீ அமுதுசெய வேண்டும் என்னக்

---

6. நண்பு - ஈண்டுப் பக்தி. மதுரம் - இனிமை. மல்லல் - வளன்.

7. வருக்கை - பலாவகை. 'பொல்லாத பிள்ளையார்' - திருநாரையூர்ப் பிள்ளையார்த் திருநாமம்.

8. இம்பர் - இவ்வுலகு ; (உம்பர், அம்பர் என்பன இணைச்சொற்கள்) நாற்சுத்தி பூதசுத்தி முதலியன.

கம்பமதக் களிற்றுமுகத் தானும் அங்குக்
கருத்தினுடன் நம்பியுரைக்கு இசைந்து காட்ட
இம்பரினில் வந்தனநாற் சுத்திசெய்தே
இருந்தவெலாம் படைக்கஅவன் ஏற்றல் செய்தான். **8**

புகர்முகக்கை புறப்படவே படைத்த எல்லாம்
புகுந்தவிடம் அறியாமற் போன பின்னை
அகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார
நம்பிகழல் அன்பினல் அரசன் போற்றி
மிகவும்ஒரு விண்ணப்பம் அடியேற் குண்டு
வேதியனே கேள்என்று விளம்பு வான்மெய்ப்
புகழதுசேர் மூவர்தமிழ் தொண்டர் செய்தி
பூதலத்தில் விளங்கஎனப் போற்றி நின்ருன். **9**

அந்தவுரை கேட்டலும்அங்கு அரசன் தன்னை
நம்பிமகிழ்ந்து அருள்புரிவான் அருள்சேர் மூவர்
செந்தமிழ்கள் இருந்தவிடம் அன்ப ருள்ளோர்
செய்திக்குஅவ் விநாயகன்தாள் சிந்தித்து எந்தாய்
அந்தவகை ஏதென்று கேட்டால் எந்தை
மகிழ்ந்தருளும் அந்நெறியை வழாது உனக்குத்
தந்திடுவன் மன்னபொறு என்று சொல்லித்
தந்திமுகன் சந்நிதியில் தாழ்ந்து சென்ருன். **10**

---

*9. புகர் - புள்ளி. செய்தி - செய்த அருளிப்பாடுகள். விளங்க - வியங்கோள் வினைமுற்று.*

*10. செந்தமிழ்கள் - செவ்விய தமிழ்ப் பதிகங்கள். வழாது - வழுவாதபடி. தாழ்தல் - இறைஞ்சுதல்.*

சென்றுபணிந்து இபமுகத்தோன் பாதப் போதைச்
 சென்னியில்வைத்து அவனருளின் திளைத்துச் சிந்தை
ஒன்றும்அற உருகிவிழி தாரை கொள்ள
 உண்மையினுல் வந்தித்துஅங்கு உவாவோன் தன்னை
இன்றமிழ்சேர் மூவர்தமிழ் இருந்த எல்லை
 எல்லையில்சீர்த் திருத்தொண்டர் இயல்பு மூர்த்தி
நன்றும்அருள் செய்தருள வேண்டும் என்ன
 நாகமுகன் நம்பிக்கு நவில லுற்முன். 11

வார்ந்தருட்கண் நீர்சொரிய நம்பி கேட்ப
 வண்டமிழ்கள் இருந்தவிடம் மன்றுள் ஆடும்
கூர்ந்தஇருட் கண்டர்புறக் கடையின் பாங்கர்க்
 கோலமலர்க் கைகள்அடை யாள மாகச்
சார்ந்தனஎன்று அருள்செய்து தொண்டர் பேறும்
 சாற்றுதலால் சகதலத்தோர் அருளைச் சார
வார்ந்ததமிழ் இருந்தஇடம் அன்பர் செய்தி
 அத்தனையும் நம்பிமனத் தருளிற் கொண்டார். 12

கொண்டுகுல சேகரனும் கோன்பால் வந்து
 குஞ்சரத்தோன் அருள்செய்த கொள்கை எல்லாம்
மண்டுபெருங் காதலுடன் சொல்லி அந்த
 வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்

---

11. இபமுகத்தோன் - ஆனைமுகன். பாதப்போது - திருவடி மலர். தாரை - ஒழுக்கு. நாகமுகன் - ஆனை முகன்.

12. கூர்ந்த - நிறைந்த. கோலம் - அழகு.

13. மண்டு - நிறைதல். 'மூவர் பாடல் கண்ட பெருமந்திரம்' என்ற நுட்பம் நோக்குக.

கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்
　　கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல்
எண்டிசையும் சிவன்அருளைப் பெறுதற் காக
　　இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள் நீ. 13

சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமும்
　　தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கின்
பீடுடைய உமைமுலைப்பால் அருளால் உண்டு
　　பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக் கண்டு
தோடுடைய செவியன்முதல் கல்லூர் என்னுந்
　　தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப்
பாடினார் பதிகங்கள் பாவில் ஒன்றும்
　　பதினாறுயிரம் உளதாப் பகரும் அன்றே. 14

திருநாவுக் கரையரெனும் செம்மை யாளர்
　　தீயமணர் சிறைநீங்க அதிகை மேவும்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
　　கொடுங்கூற்று யினஎன்ன எடுத்துக் கோதில்

---

14. சேடர் - சிறந்தோர்; சேடு - சிறப்பு, பெருமை. வேந்தர் - சம்பந்தர். பரசமயம் - புறச் சமயங்கள். திருஞானசம்பந்தர் பாடிய பதிகங்கள் பதினாறுயிரம் என்க.

15. செம்மையாளர் - என்றதால், ' திருநின்ற செம்மையே செம்மை'யாகக் கொண்டவர் என்பது விளங்கும். குரு நாமப் பரஞ்சுடர் - நல்ல நிறமும், புகழும் உடைய மேலான ஒளி வடிவினன். ' ஒருவரையும்' என்று இறுதிப் பாடல் தொடக்கம் குறிக்கப்பட்டுள்ளதால் ' ஒருவனை, என்ற பாடம் பிழையுடைத்தாதல் விளங்கும். பாடிய பதிகங்கள் நாற்பத்தொன்பதினாயிரம் எனப்பட்டது.

ஒருமானைத் தரிக்கும்ஒரு வரையுங்காறும்
ஒருநாற்பத் தொன்பதினு யிரம தாகப்
பெருநாமப் புகலூரின் பதிகம் கூறிப்
பிஞ்ஞகனுர் அடியிணைகள் பெற்று ளாரே. 15

பின்புசில நாளின்கண் ஆரூர்நம்பி
பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் பித்தா என்னும்
இன்பமுதல் திருப்பதிகம் ஊழிதோறும்
ஈருய்முப்பத் தெண்ணு யிரம தாக
முன்புபுகன்று அவர்நொடித்தான் மலையிற்சேர்ந்தார்
முறைகள்எல்லாம் திருத்தில்லை மூதூர் தன்னில்
அன்றுஅவர்கை இலச்சினையால் வைத்தார் மன்ன
ஆராய்ந்து தருகஎன அருளிச் செய்தார். 16

அருமறையைச் சிச்சிலிபண்டு அருந்தத்தேடும்
அதுபோல்அன் றுஇதுஎன்றும் உளதாம் உண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே அன்றிப்
பலரில்லை என்றெழுதும் பனுவல் பாரின்
எரியினிடை வேவாதுஆற் றெதிரே ஓடும்
என்புக்கும் உயிர்கொடுக்கும் இடுநஞ்சாற்றும்
கரியைவளை விக்கும்கல் மிதக்கப் பண்ணும்
கராம்மதலை கரையில்உறக் காற்றும் காணே. 17

---

*16. சுந்தரர் பாடிய பதிகங்கள் முப்பத்தெண்ணுயிரம் எனப்பட்டது. இலச்சினை - அடையாளம். ‘பித்தா’ என்னும் பதிகம் ‘இன்பமுதல் திருப்பதிகம்’ எனப் பட்டமை நோக்குக.*

*17. இது திருமுறைப் பெருமையை உரைக்கின்றது. கரி - ஆனை; வளைவித்தல் - வணங்கச்செய்தல். கராம் - முதலை; காற்றுதல் - உமிழச்செய்தல்.*

என்றென்று நம்பிக்குப் பரிவால் உண்மை
　　இன்றமிழின் பெருமைதனை இயம்பக் கேட்டுக்
குன்றுஒன்று பேருருவம் கொண்டாற் போலும்
　　குஞ்சரத்தோன் அருளினைஉட் கொண்டு மன்னன்
மன்றின்இடம் சென்றுமறை யோர்கள் தொண்டர்
　　வார்சடையோர் காவலுடை மரபோர்க் கெல்லாம்
நன்றெங்கள் கணபதிதன் சொல்இதுஎன்று
　　நன்மையுடன் மன்னவனார் நவிலுங் காலை. 18

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர் வந்தால்
　　அறைதிறக்கும் எனஉரைக்க அரசன் தானும்
மெய்த்தகுசீர் அம்பலவர்க்கு உற்ற செல்வ
　　விழாஎடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை
உய்த்துஅணிவீ தியினில்உலா வருவித்து உம்பர்
　　நாயகன்தன் கோயில்வலம் ஆக்கி உள்ளே
சித்தமெலாம் உருக்குதமிழ் இருக்கை சேரச்
　　சேர்த்திஅவர் சேர்ந்ததெனச் செப்பி நின்றான். 19

ஐயர்நடம் ஆடும்அம் பலத்தின் மேல்பால்
　　அருள்பெற்ற மூவர்தமது அருள்சேர் செய்ய
கையதுவே இலச்சினையாய் இருந்த காப்பைக்
　　கண்டவர்கள் அதிசயிப்பக் கடைவாய் நீக்கிப்

---

*18.* பரிவு - கருணை. 'மன்னவனார்' என்றார் அருளுயர்வு தோன்ற.

*19.* 'என' என்பது வரை மறையோர் மொழி. உம்பர் - தேவர். 'சித்தமெலாம் உருக்கு தமிழ்' என்பறு திருமுறை உயர்வைக் காட்டும் மெய்ம்மொழி.

*20.* கடைவாய் - கடைக்காப்பு. வன்மீகம் - கரையான். 'பொய்யுடையோர் அறிவைப் புலன்கள் மறைப்பது போல் ஏடுகளை வன்மீகம் மூடியிருந்தது'.

பொய்யுடையோர் அறிவுதனைப் புலன்கள்மூடும்
 பொற்பதுபோல் போதமிகும் பாடல்தன்னை
நொய்யசிறு வன்மீகம் மூடக்கண்டு
 நொடிப்பளவி னில்சிந்தை நொந்த வேந்தன். 20

பார்த்ததனைப் புறத்துய்ப்ப உரைத்து மேலே
 படிந்திருந்த மண்மலையைச் சேரத் தள்ளிச்
சீர்த்ததில தயிலமலி கும்பம் கொண்டு
 செல்லுநனை யச்சொரிந்து திருவே டெல்லாம்
ஆர்த்தஅரு ளதனுலே எடுத்து நோக்க
 அலகிலா ஏடுபழு தாகக் கண்டு
தீர்த்தமுடிக் கணிபரனே பரனே யென்னச்
 சிந்தைதளர்ந்து இருகணீர் சோர நின்றான். 21

ஏந்துபுகழ் வளவன்இவ்வா றன்பி னாலே
 இடர்க்கடலின் கரைகாணு து இனையுங் காலைச்
சார்ந்தமலை மகள்கொழுநன் அருளால் வேதச்
 சைவநெறித் தலைவரெனு மூவர் பாடல்
வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தே யீண்டு
 வேண்டுவன வைத்தோமென் றுலகி லுள்ள
மாந்தரொடு மன்னவனும் கேட்கு மாற்றால்
 வானகத்தில் ஒரோசை எழுந்த தன்றே. 22

---

21. திலதயிலம் - எள்ளெண்ணெய். செல்லு - கரையான்.

22. இனைதல் - வருந்துதல். "சைவநெறித்தலைவர்" (சைவ சமயாசாரியர்) என்ற தொடர் அழகு நோக்குக.

அந்தமொழி கேட்டலுமே மன்னன் தானும்
ஆடினுன் பாடினுன் அலக்கண் யாவும்
சிந்தினுன் அமுதமுண்டான் போல நெஞ்சம்
தேறினுன் நம்பிதிரு வடியிற் ருழ்ந்தான்
பந்தமறு சிவனடியார் கொள்கவென்னுப்
பண்டாரம் திறந்துவிட்டான் பரிவு கூர்ந்தான்
இந்தவகைப் பெருங்களிகொள் மன்னன் தானும்
எழின்முறையை முன்போல வகுக்க வெண்ணி. 23

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர்
வகுத்தருளால் அமைத்ததிரு முறையோர் மூன்றும்
அன்னவகை வாகீசர் முறையோர் மூன்றும்
ஆரூர ருரைத்ததிரு முறைய தொன்றும்
துன்னவகை ஏழாகத் தொகுத்துச் செய்தான்
தூயமனு எழுகோடி யென்ப துன்னித்
தன்னிகரில் திருவருளான் மன்னன் தானும்
தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. 24

---

23. அலக்கண் - துன்பம். பண்டாரம் - கருவூலம். முறை - திருமுறை.

24. திருமுறை வகுத்தது பற்றிக் கூறுகின்ற பாடல். 'எழுகோடி மந்திரம் என்பது கருதி ஏழாக வகுத்தான்' என்றபடி.

வேறு

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்று
எண்பத்தி னான்கினால் இலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறையொன்று நூற்றினால் வன்றொண்டர். 25

ஆகவளர் திருமுறையே ழநட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகும் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். 26

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்
சித்திதரும் இறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா [சிச்
உய்த்தபதி கங்களையும் ஒருமுறையாச் செய்களனப்
பத்திதரும் திருமுறைகள் பதினொன்றுப் பண்ணினார். 27

---

*25. சம்பந்தர் 384; அப்பர் 310; சுந்தரர் 100. ('ஏழ் மூன்று' என்ற தொடர் 21 (7 × 3) என்றும் பொருள் கொள்ள இடம் தருகின்றது).*

*26. மோகம் - காமம். 'திருவிசைப்பா மாலை' என்பதுதான் முன் வகுத்திருந்த பெயரோ என்று எண்ணு விக்கின்றது இரண்டாம் வரி. பாகம் - பகுதி.*

*27. சித்தி தரும் இறை - 'ஆலவாயின் மன்னிய சிவன்'.*

மந்திரங்கள் எழுகோடி ஆதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார். 28

ஆக்கியபின் திருத்தொண்டத் தொகையடைவைஅருளாலே
நோக்கியபின் நாயன்மார் நுடங்கடைவும் தொழிற்பேறும்
பாக்கியத்தால் இபமுகத்தோ னருள்செய்த பகுதியினால்
வாக்கியல்சேர் அந்தாதி நம்பியடை வேவகுத்தார். 29

சீரருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டம்
சாருமவ ரொன்பானும் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினால்
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். 30

சென்னியருள் நம்பியிவர் அந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனே
இன்னிசைதந் தருளென்ன இரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோன் அருள்செய்த கடனுரைப்
பாம். 31

---

28. மந்திரங்கட்கும், திருமுறை வகுப்புக்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றது.

29. நுடங்கு - பொருந்துதல். பாக்கியம் - செல்வம். வாக்கியல் - வாக்கின் செம்மை. அந்தாதி - திருத் தொண்டர் திருவந்தாதி.

31. பண் வகுக்க வேண்டும் என்று ஏத்திய திறம் உரைக்கின்றது. கன்னி - இறைவி.

நல்லிசையாழ்ப் பாணனுர் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்குஇசைகள் வாய்ப்பஅளித் தோமென்று
சொல்லவவள் தனையழைத்துச் சுருதிவழிப் பண்தழுவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுள்மகிழ்ந்தார். 32

ஆங்கவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற்கு ஒக்குமென ஓர்ஓசை
நீங்கரிய வானின்கண் நிகழஅரசன்கேட்டான். 33

மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் கும்கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவண்முதலா இசைத்த இசை
தென்னிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம். 34

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையாம்
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம்
உன்னரிய தக்கேசிக்கு ஓரிரண்டு வருவித்தார். 35

---

32. வல்லி - பெண். சுருதி - செவிவழி.

33. வானின் எழுந்த ஓரோசையை அரசன் கேட்டவாறு உரைக்கின்றது.

34. வானத்து இறைமொழி மேன்மை கூறுகின்றது. 'தென்திசையே வென்றேற' எனும் சேக்கிழார் கருத்து ஒப்பிடத்தக்கது.

35. இதுமுதல் 43 ம் பாடல் வரை பண் அமைப்புப் பேசப்படுகின்றது. உன்னரிய - சிந்தித்தற்கு அரிய.

மேவுகுறிஞ் சிக்குஅஞ்சு வியாழகுறிஞ் சிக்குஆறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த இந்தளத்தின் செய்திக்கு நான்குஇனிய
தாவில்புகழ்க் காமரத்தின் தன்மைதனக்கு இரண்டமைத்
தார். 36

காந்தார மாகிய பியந்தையாம் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்கு
ஏய்ந்தவகை இரண்டாக்கிச் செவ்வழிஒன் றாக்கிஇசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். 37

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லில்இரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்கு
ஒல்லையினில் ஒன்றாக்கிச் சாதாரிக்கு ஒன்பதாப்
புல்லுமிசைப் புறநீர்மைக்கு ஒன்றாகப் போற்றினார். 38

அந்தாளிக்கு ஒன்றாக்கி வாகீச ருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றென்று மொழிவித்து
நந்தாத நேரிசையாம் கொல்லிக்கு நாட்டிரண்டு
உந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்
துரைத்தார். 39

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்கு
ஆண்டகையார் தடுத்தாண்ட ஐயருள் துய்யமுறைக்கு
ஈண்டிசைசேர் இந்தளத்துக்கு இரண்டாக எடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக்கு இரண்டாக நிகழ்வித்தார். 40

---

36. தாவுதல் - கெடுதல். தேவு - தெய்வத்தன்மை.

39. வாகீசர் தமிழை 'அருந்தமிழ்' என்று விரித்தது உணரத்தக்கது.

40. தாபித்து - நிறுவி. ஐயர் - சுந்தரர்.

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்ருக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்கு
ஏறும்வகை இரண்டாக்கி இன்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையாறு ஆக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். 41

ஒன்ருகும் காந்தார பஞ்சமத்துக்கு ஓரிரண்டா
நன்ருன சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கின்
குன்ருத புறநீர்மைக்கு இரண்டாகும் கூறுமிசை
ஒன்ருகக் காமரத்துக்கு ஒன்ருகப் போற்றிஞர். 42

உற்றவிசைக் குறிஞ்சிக்குஓர் இரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செத்துருத்திக்கு ஒன்ருக்கிக் கவுசிகப்பாற்
துற்றவிசை இரண்டாக்கித் தூயஇசைப் பஞ்சமத்துக்கு
அற்றவிசை ஒன்ருக்கி அரனருளால் விரித்தமைத்தார். 43

இந்தவகை சிவன்செவிப்பால் எக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா அறுபத்து மூவர்அருள் அம்புவிமேல்
நந்தியிட மும்மலமும் நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி. 44

சீராரும் திருமுறைகள் கண்டதிறல் பார்த்திபனும்
ஏராரும் இறைவனையும் எழிலாரு நம்பியையும்
ஆராத அன்பினுடன் அடிபணிந்தங்கு அருள்விரவச்
சோராத காதன்மிகும் திருத்தொண்டர் பதம்துதிப்பாம்.45

திருமுறைகண்ட புராணம் முற்றிற்று

ஆக திருவிருத்தம் 46.

---

44. நந்துதல் - விளங்குதல். சென்னி - சோழன்.

45. பார்த்திபன் ஆம் இறைவன் - அரசன். நம்பி - நம்பியாண்டார் நம்பிகள். சோராத காதல் – இடையறவு படாத அன்பு. பதம் - பாதம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருத்தொண்டர் புராண சாரம்

மல்குபுகழ் வன்றெண்டர் அருளால் ஈந்த
 வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார்
 நம்பிதிரு வந்தாதி நவின்ற வாற்றல்
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
 பான்மையார் எமையாளும் பரிவால் வைத்த
செல்வமிகும் திருத்தொண்டர் புராண மேவும்
 திருந்துபயன் அடியேனும் செப்ப லுற்றேன். 1

### சுந்தரமூர்த்தி நாயனுர் புராணம்

தண்கயிலை அதுநீங்கி நாவலூர் வாழ்
 சைவனுர் சடையனுர் தனய னுராய்
மண்புகழ அருட்டுறையான் ஓலை காட்டி
 மணம்விலக்க வன்றெண்டாய் அதிகை சேர்ந்து

---

1. புல்குதல் - பொருந்துதல். பல்குதல் - பலவாதல். தொண்டர் சீர் .......பான்மையார் - சேக்கிழார்.

2. அருட்டுறையான் - திருவெண்ணெய் நல்லூர்த் தலத்து இறைவன்.

நண்பினுடன் அருள்புரிய ஆரூர் மேவி
　　நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்தும்
　　திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னரே. 2

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
　　திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னுச் செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
　　தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில்தனித் தூதுவந்தா றூடு கீறி
　　உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி அருளாற் சேர
　　வேந்தருடன் வடகயிலை மேவி னரே. 3

## தில்லைவாழந்தணர் புராணம்

நல்லவா னவர்போற்றும் தில்லை மன்றுள்
　　நாடகஞ்செய் பெருமானுக்கு அணியார் நற்பொன்
தொல்லைவான் பணியெடுத்தற்கு உரியார் வீடும்
　　துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத்
தில்லைவாழ் அந்தணரென் றெடுத்து நாதன்
　　செப்பும்அருள் உடையார்முத் தீயார் பத்திக்கு
எல்லைகாண் பரியார்ஒப் புலகில் தாமே
　　ஏய்ந்துளார் எமையாள வாய்ந்து ளாரே. 4

---

3. தடம் - குளம். உறு - வலிமிக்க. மெய்ப் பெரிய களிறு - விண்ணுலக ஆனே.

4. நாடகம் - கூத்து. முத்தீ - ஆகவனீயம் முதலிய மூன்று தீ. ஏய்தல் - பொருந்துதல். வீடு - முத்தி. "வீடும் வேண்டா விறல்" என்ற சேக்கிழார் வாக்கு நினைக்கத்தக்கது. வீடும் - உம்மை, உயர்வு சிறப்பு.

## திருநீலகண்ட நாயனர் புராணம்

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித்
    தீண்டில்எமைத் திருநீல கண்டம் என்று
சொல்லுமனை யாள்தனையே அன்றி மற்றும்
    துடியிடையார் இடையின்பந் துறந்துமூத்து அங்கு
எல்லையிலோடு இறைவைத்து மாற்றிநாங்கள்
    எடுத்திலமென் றியம்புமென இழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி இளமையெய்தி
    விளங்குபுலீச் சரத்தரனை மேவி னரே. 5

## இயற்பகை நாயனர் புராணம்

எழிலாரும் காவிரிப்பூம் பட்டி னத்துள்
    இயல்வணிகர் இயற்பகையார் இருவர் தேட
அழலாய பிரான்றூர்த்த மறையோ னுகி
    ஆயிழையைத் தரவேண்டி அணைய வையன்
கழலாரப் பணிந்துமனைக் கற்பின்மேன்மைக்
    காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த
பிழையாரும் சுற்றமெலாம் துணித்து மீளப்
    பிஞ்ஞகனர் அழைத்தருளப் பெற்று ளாரே. 6

---

5. புலீச்சரம் - சிதம்பரம். வியாக்கிரபாதர் எனப் படும் புலிக் கால் முனிவர் வழிபட்டதனுல் இப்பெயர் இத் தலத்திற்கு ஆயிற்று.

6. அமர் - மாறுபாடு. துணித்து - வெட்டி.

## இளையான்குடிமாற நாயனார் புராணம்

மன்னியவே ளாண்தொன்மை இளசை மாறர்
வறுமையால் உணவுமிக மறந்து வைகி
உன்னருநள் ளிருள்மழையில் உண்டி வேண்டி
உம்பர்பிரான் அணையவயல் உழுது வித்தும்
செந்நெல்முளை அமுதுமனை யலக்கால் ஆக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரும் உணவருந்தற்கு எழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே. 7

## மெய்ப்பொருள் நாயனார் புராணம்

சேதிபர்நற் கோவலூர் மலாடமன்னர்
திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை
நீதியினார் உடன்பொருது தோற்ற மாற்றான்
நெடுஞ்சினமும் கொடும்படையு நிகழா வண்ணம்
மாதவர்போல் ஒருமுறைகொண்டு அணுகி வாளால்
வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன்
காதலுற நமர்தத்தா என்று நோக்கிக்
கடிது அகல்வித்து இறைவனடி கைக்கொண் டாரே. 8

---

7. இளசை - இளையான்குடி. மாறர் - இயற்பெயர். வித்தும் - விதையாக இட்ட. பன்னல் - பேசுதல். பரலோகம் - மேல் உலகம்.

8. ‘திருவேடமே மெய்ப்பொருளாத் தெளிந்த’ என்பதனால் இந் நாயனாரது பெயர்க்காரணம் புலப்படுத்தியவாறு. ‘தத்தா நமர்’ எனும் தொடரின் ஏற்றம் குறிப்பிக்க எடுத்தோதப்பட்டது.

## விறன்மிண்ட நாயனுர் புராணம்

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் தொன்மை
　　விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில்
வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
　　வன்ருெண்டன் புறகவனே வலிய ஆண்ட
துளங்குசடை முடியோனும் புறகென் றன்பால்
　　சொல்லுதலும் அவர்தொண்டத் தொகைமுன் பாட
உளங்குளிர உளதென்ருர் அதனுலண்ணல்
　　உவகைதர உயர்கணத்துள் ஓங்கி ஞரே. 9

## அமர்நீதி நாயனுர் புராணம்

பழையாறை வணிகர்அமர் நீதியார்பால்
　　பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலு நல்லூர்க்
குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைத்துக்
　　கொடுத்ததனை எடுத்தொளித்துக் குளித்து வந்து
தொழிலாரும் அதுவேண்டி வெகுண்டு நீர்இத்
　　துலேயில்இடும் கோவணநேர் தூக்கு மென்ன
எழிலாரும் பொன்மனைவி இளஞ்சே யேற்றி
　　ஏறினர்வா னுலகுதொழ ஏறி ஞரே. 10

## எறிபத்த நாயனுர் புராணம்

திருமருவு கருவூரா னிலையார் சாத்தும்
　　சிவகாமி யார்மலரைச் சிந்த யானே
அரனெறியோர் எறிபத்தர் பாக ரோடும்
　　அறவெறிய என்னுயிரும் அகற்றீ ரென்று

---

9. புறகு - புறம் என்னும் பொருளது.

10. குழை - காதணி. துலே - சமம் செய்து சீர் தூக்கும் கோல்.

11. கருவூர் தலப் பெயரும், ஆனிலே திருக்கோயிற் பெயரும் ஆம்.

புரவலனூர் கொடுத்தபடை அன்பால் வாங்கிப்
புரிந்தரிவான் புகஎழுந்த புனித வாக்கால்
கரியினுடன் விழுந்தாரும் எழுந்தார் தாமும்
கணநாதர் அதுகாவல் கைக்கொண் டாரே. 11

## ஏனாதிநாத நாயனூர் புராணம்

ஈழக் குலச்சான்றூர் எயின னூர்வாழ்
ஏனாதி நாதனூர் இறைவன் நீற்றைத்
தாழத் தொழுமரபார் படைக ளாற்றும்
தன்மைபெறு அதிசூரன் சமரிற் றேற்று
வாழத் திருநீறு சாத்தக் கண்டு
மருண்டார் தெருண்டார்கை வாள்வி டார்நேர்
வீழக் களிப்பார்போல் நின்றே யாக்கை
விடுவித்துச் சிவனருளே மேவி னூரே. 12

## கண்ணப்ப நாயனூர் புராணம்

வேடர்அதி பதிஉடுப்பூர் வேந்தன் நாகன்
விளங்கியசேய் திண்ணனூர் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமும் குஞ்சிதரு மலரும்
காய்ச்சினம்என் றிடுதசையும் காளத்தி யார்க்குத்
தேடரும்அன் பினில்ஆறு தினத்தளவும் அளிப்பச்
சீறுசிவ கோசரியும் தெளியவிழிப் புண்ணீர்
ஓடவொரு கண்ணப்பி ஒருகண் ணப்ப
ஒழிகவெனு மருள்கொடரு குறநின்றூரே. 13

---

*12.* ஏனாதி - ஒருவகைச் சிறப்புப் பெயர்.

*13.* கன்னிவேட்டை - முதல் வேட்டை. குஞ்சி - ஆடவர் தலைமயிர். சீறு - சினந்த. அருகு உற - பக்கத்தில் பொருந்த.

## குங்குலியக்கலய நாயனுர் புராணம்

சீலமலி திருக்கட வூர்க் கலய னுராம்
திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளஎன்று வாங்கிக் கொண்டு
சங்கையில்குங் குலியத்தால் சார்ந்த செல்வர்
ஞாலநிகழ் திருப்பனந்தாள் நாதர்நேரே
நரபதியும் தொழக்கச்சான் நயந்து போதப்
பாலமுதம் உண்டாரும் அரசு மெய்திப்
பரிந்தமுது செயஅருள்சேர் பான்மை யாரே. **14**

## மானக்கஞ்சாற நாயனுர் புராணம்

கஞ்சநகர் மானக்கஞ் சாற னுர்சீர்க்
காதல்மகள் வதுவைமணம் காண நாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவ னுகி
வந்துபுகுந் தவள்அளக மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காம்என்ன அரிந்து நீட்டும்
பத்தரெதிர் மறைந்துஇறைவன் பணித்த வாக்கால்
எஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை
ஏயர்பிராற் குதவியருள் எய்தினுரே. **15**

---

*14.* சீலம் - ஒழுக்கம். சங்கையில் - தெளிவான. நரபதி - மக்கள் தலைவன்; மன்னன். பால் அமுதம் உண்டார் - திருஞானசம்பந்தர். அரசு - திருநாவுக்கரசர்.

*15.* கஞ்சநகர் - கஞ்சாறு. காதல் - விருப்பம். அளகம் - கூந்தல். பஞ்சவடி - புரிநூல்.

## அரிவாட்டாய நாயனுர் புராணம்

தாவில்கண மங்கலத்துள் வேளாண் தொன்மைத்
　　தாயனுர் நாயனுர் தமக்கே செந்நெல்
தூவரிசி எனவிளேவ தவையே யாகத்
　　துறந்துணவு வடுவரிசி துளங்கு கீரை
ஆவினின்ஐந் துடன்கொணர ஓர்கமரிற் சிந்த
　　அழிந்தரிவாள் கொண்டுட்டி அரியா முன்னே
மாவடுவின் ஒலியும்அரன் கரமும் தோன்றி
　　வாள்விலக்கி அமரர்தொழ வைத்த தன்றே. 　　16

## ஆனய நாயனுர் புராணம்

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருள்
　　மருவுபுகழ் ஆனயர் வளரா மேய்ப்பார்
கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
　　குழலிசையின் ஐந்தெழுத்தும் குழைய வைத்துத்
தங்குசரா சரங்களெல்லாம் உருகா நிற்பத்
　　தம்பிரான் அணேந்தசெவி தாழ்த்தி வாழ்ந்து
பொங்கியவான் கருணேபுரிந் தென்றும் ஊதப்
　　போதுகளன்று அருளஉடன் போயி னரே. 　　17

---

16. ஆவினின் ஐந்து - பஞ்சகவ்யம்.

17. ஆ - பசு. கொங்கு - மணம்; வண்டெனலுமாம். சராசரங்கள் - அசையும் பொருள் அசையாப் பொருள்.

## மூர்த்தி நாயனார் புராணம்

வழங்குபுகழ் மதுரை நகர் மூர்த்தி யாராம்
வணிகர்திரு ஆலவாய் மன்னர் சாத்தத்
தழங்குஉதிர முழங்கைதரத் தேய்த்த ஊறும்
தவிர்ந்தமணர் வஞ்சனையும் தவிர மன்னன்
இழந்தவுயிர் இனனாக ஞாலநல்க
எழில்வேணி முடியாக இலங்கு வேட
முழங்குபுகழ் அணியாக விரை நீருக
மும்மையுல காண்டருளின் முன்னி னரே. **18**

## முருக நாயனார் புராணம்

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாராம்
மறையவர்கோ வர்த்தமா னீச்ச ரத்தார்
சென்னியினுக்கு அழகமரும் மலர்கள் கொய்து
திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக்
கன்னிமதிற் கழுமலநா டுடைய நாதன்
காதல்மிகு மணம்காணும் களிப்பி னலே
இன்னல்கெட உடன்சேவித் தருளான் மீளாது
இலங்குபெரு மணத்தரனை எய்தி னரே. **19**

---

*18.* உதிரம் - குருதி. வேணி - சடை. மும்மை - திருநீறு, உருத்திராக்கம், சடை ஆகிய மூன்று.

*19.* நாதன் - திருஞானசம்பந்தர். சேவித்து - வணங்கி, பெருமணத்து - நல்லூர்ப் பெருமணம் என்ற தலத்து.

## உருத்திரபசுபதி நாயனார் புராணம்

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும்
பசுபதியா ரெனுமறையோர் பணிந்து செந்தேன்
அங்கமல மடுவினிடை அல்லு மெல்லும்
அகலாதே யாகளமாய் அமர்ந்து நின்று
திங்கள்வளர் சடைமுடியான் அடிகள் போற்றித்
திருவெழுத்தும் உருத்திரமும் திகழ ஓதி
மங்கையிடம் உடையபிரான் அருளால் மேலை
வானவர்கள் தொழும்உலகின் மன்னி னாரே. 20

## திருநாளைப்போவார் நாயனார் புராணம்

நன்மைதிகழ் மேற்கா நாட்டு ஆத னூர்வாழ்
நந்தனார் புறத்தொண்டர் நாளைப் போகப்
பொன்மலிதென் புலியூர்க்கென்று உரைப்பார் புன்கூர்
பொய்கைஅமைத்து அடலேறு பிரிய நோக்கி
வன்மதில்சூழ் தில்லையிறை அருளால் வாய்ந்த
வண்டழலின் இடைமூழ்கி மறையோர் போற்ற
மின்மலிசெஞ் சடைமுனியாய் எழுந்து நாதன்
விளங்குநடம் தொழமன்றுள் மேவி னாரே. 21

---

*20.* பங்கம் - குற்றம். அம் - அழகு. அல் - இரவு. எல் - பகல். உருத்திரம் - ஸ்ரீருத்ரம். திருவெழுத்து - ஐந்தெழுத்து.

*21.* 'மேற்காநாட்டு ஆதனூர்' என்றது பிற ஆதனூர்களினின்றும் பிரித்துக்காட்ட. மின் - விளக்கம். மன்று - தில்லைப் பொன்னம்பலம்.

## திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகர்ஏ காலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகின்
வருந்தும்உடல் எனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதுஒழிய மழையும் மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கல்மேல்
சிந்தமுடி புடைப்பளவில் திருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னாரே. 22

## சண்டேசுர நாயனார் புராணம்

வேதமலி சேய்ஞலூர் எச்ச தத்தன்
விளங்கியசேய் மறைபயிலும் விசார சன்மர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொறுது தாமே
கொண்டுநிரை மண்ணியின்தென் கரையின் நீழல்
தாதகியின் மணல்இலிங்கத் தான்பால் ஆட்டத்
தாதைபொரு தவையிடறும் தாள்கள் மாளக்
காதிமலர்த் தாமம்உயர் நாம முண்ட
கலமகனும் பதம்அருளால் கைக்கொண் டாரே. 23

---

22. கொத்து - பூங்கொத்து.

23. கோதனம் - பசுக்களாகிய செல்வங்கள். தாதகி-ஆத்திமரம். காதி - மாறுபட்டு. தாமம் - இண்டைமாலை

போற்றுதிரு வாமூரில் வேளாண்தொன்மைப்
பொருவில்கொறுக் கையர்அதிபர் புகழ னுர்பால்
மாற்றரும்அன் பினில்திலக வதியாம் மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாரும்
தோற்றியமண் சமயமுறு துயரம் நீங்கத்
துணைவர்அருள் தரவந்த சூலை நோயால்
பாற்றருநீள் இடர்எய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித்து அரன்அதிகைப் பதியில் வந்தார். **24**

வந்துதமக் கையர்அருளால் நீறு சாத்தி
வண்டமிழான் நோய்தீர்ந்து வாக்கின் மன்னுய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலம் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமில்அப் பூதிமகன் அரவு மாற்றி
அருட்காசு பெற்றுமறை அடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந்து ஐயாற்றில் கயிலை கண்டு
பூம்புகலூர் அரன்பாதம் பொருந்தி னுரே. **25**

---

*24.* கொறுக்கையர் - குடிப்பெயர். துணைவர் - திலகவதியார். ‘அருள் தரவந்த சூலைநோய்’ - என்பதனுல் சூலைக்குரிய காரணம் கூறிற்று. பால்தரு நீள் எனப் பிரித்து ‘பகுதியவாகிய நெடிய’ என்று பொருள் உரைக்க. பாழி - சமணர் பள்ளி.

*25.* வெந்தபொடி - நீற்றறை. வேலை - கடல். அப்பர் அருளிய அற்புதங்கள் அனைத்தையும் சுருக்கி உரைத்த ஒட்பம் காண்க.

## குலச்சிறை நாயனார் புராணம்

கோதில்புகழ் தருமணமேற் குடியார்கோவண்
குலச்சிறையார் தென்னர்குல அமைச்சர் குன்று
மாதவர்கள் அடிபரவும் மரபார் பாண்டி
மாதேவி யாரருள்வான் பயிர்க்கு வேலி
காதல்மிகு கவுணியர்கோன் வாதில் தோற்ற
கையரைவை கைக்கரைசேர் கழுவில் ஏற்று
நீதியினார் ஆலவாய் நிமலர்ச் சேர்ந்த
நின்மலனார் என்மலங்கள் நீக்கி னாரே. 26

## பெருமிழலைக்குறும்ப நாயனார் புராணம்

கொண்டல்பனி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னார்சீர்
அண்டர்பிரான் அடியவருக் கடியா ராகும்
ஆதரவால் அணுக்கவன் றொண்டர்க் காளாய்
மண்தொழும்எண் டகுசித்தி வாய்த்து ளார்தாம்
வன்றொண்டர் வடகயிலை மருவு நாண்முன்
எண் திகழு மறைமூல நெறியூ டேகி
யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தி னாரே. 27

---

26. வேலி - வேலிபோல்வார். கையர் - சமணர். என் மலங்கள் - என்னுடைய மலமாசுகள்.

27. பனி - குளிர்ச்சி. 'மிழலைநாட்டு மிழலை' என்பதற்கு முன்னர் ஆதனூர்க்கு உரைத்தாங்கு உரைக்க. மறைமூலநெறி - யோகநெறி. எண்தரு சித்தி யாவன அணிமா லகிமா முதலிய அட்டமா சித்திகள்.

## காரைக்காலம்மையார் புராணம்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்
செங்கனிகள் திருவருளால் அழைப்பக் கண்டு
திகழ்கணவன் அதிசயித்துத் தேச நீங்க
அங்கவுடல் இழந்துமுடி நடையா லேறி
அம்மையே எனநாதன் அப்பா வென்று
பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டிற்
புனிதன்நடம் அனவரதம் போற்றி னரே. 28

## அப்பூதியடிகள் நாயனர் புராணம்

அந்தமில்நற் றிங்களூர் வரும் அப்பூதி
அருமறையோர் திருநாவுக் கரசின் நாமம்
பந்தரிடை எழுதக்கண்டு அரசு மெய்தப்
பணிந்துபரி கலநேடிப் படப்பை சேர்ந்த
மைந்தன்உயி ருயர்கதலி இலைமேற் றுஞ்சும்
வாளரவு கவரஉடன் மறைத்தல் கேட்டுச்
சிந்தைமகிழ்ந்து உயர்பதிக மருந்தாற் றீர்த்துத்
திருவமுது செயஅருளைச் சேர்ந்து ளாரே. 29

---

28. 'அங்கு அ உடல்' எனப் பிரித்து, 'அவ்விடத்து அந்த மனித உடல்' எனப் பொருள் கொள்க. அனவரதம்- எப்போதும்.

29. நேடி - தேடி. 'பதிக மருந்து' என்ற உருவகத்தின் சொல் உறுதி காண்க.

## திருநீலநக்க நாயனார் புராணம்

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை
　　நீலநக்கர் அயவந்தி நிமலர் மேனி
ஊதிவிழும் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க்கு
　　உமியாத விடநாதன் உறுநோய் காட்டக்
காதல்மிகு மனைவியையும் மகிழ்ந்து மேவிக்
　　காழியர்கோன் அமுதுசெயக் களித்து வாழ்ந்து
வேதிகையிற் பாணனார்க் கிடமும் நல்கி
　　விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே. 30

## நமிநந்தியடிகள் நாயனார் புராணம்

நண்ணுபுகழ் மறையோர்வாழ் ஏமப் பேறூர்
　　நமிநந்தி அடிகள்திரு விளக்கு நல்க
எண்ணெய்அம ணர்கள்விலக்க நீரா லாரூர்
　　இலங்குமர னெறியாருக் கேற்று நாளிற்
கண்ணமணர் கெடக்கண்பெற்று அடிகள் வாழக்
　　காவலனாள் நிபந்தங்கள் கட்டு வித்தே
அண்ணலருள் கண்டாரூர் அமர்ந்து தொண்டர்க்கு
　　ஆணியெனும் அரசினரு ளடைந்து ளாரே. 31

---

30. சிலம்பி - சிலந்தி. வேதிகை - பூசைப் பீடம்.

31. அரனெறி - திருவாரூரிலுள்ள தலம். நிபந்தங்கள் - நிவந்தங்கள். 'தொண்டர்க்கு ஆணி' என்று திருநாவுக்கரசரால் கூறப்பெற்றவர் என்றபடி.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் புராணம்

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
    கவுணியர்கோன் அழுதுமையாள் கருதி யூட்டும்
ஏழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
    இலங்கியநித் திலச்சிவிகை யிசைய ஏறி
வாழுமுய லகன்அகற்றிப் பந்த ரேய்ந்து
    வளர்கிழிபெற்று அரவின்விட மருகல் தீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
    மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே. 32

ஆரெரியிட்டு எடுத்தவே டவைமுன் னேற்றி
    ஆற்றிலிடும் ஏடெதிர்போ யணைய வேற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி
    ஓதுதிருப் பதிகத்தால் ஓட மேற்றிக்
காருதவும் இடிபுத்தன் றலையில் ஏற்றிக்
    காயாத பனையின்முது கனிக ளேற்றி
ஈரமிலா அங்கமுயி ரெய்த வேற்றி
    இலங்குபெரு மணத்தரனை யெய்தி னரே. 33

---

32. ஏழிசையின் அமுது - சிவஞானப் பேரமுது. மீனவன் - பாண்டியன்.

33. 'ஏற்றி' என்ற சொல்லை அழகுறக் கையாண்டுள்ள கவிநலம் காண்க. ஈரம் இலா - உலர்ந்த. அங்கம் - எலும்பு.

## ஏயர்கோன்கலிக்காம நாயனுர் புராணம்

ஏதமில்வே ளாளர்பெரு மங்கலத்துள்
　　ஏயர்கோன் கலிக்காமர் இறையை நேரே
தூதுகொளும் அவனனுகி லென்ஞ மென்னும்
　　துணிவினர்பால் இறைவனருஞ் சூலே ஏவி
வேதனேவன் ஞெண்டன்வரின் நீங்கு மென்ன
　　வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவல்
போதகமும் உடலிகழ எழுந்து தாழ்ந்து
　　போற்றியது விலக்கியருள் பொருந்தி ஞரே. 34

## திருமூல நாயனுர் புராணம்

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
　　காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோய் உடன்வீயத் துயர நீடும்
　　பசுக்களேக்கண்டு அவனுடலின் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி
　　ஆவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரும் அரசடியில் இருந்து கூறிக்
　　கோதிலா வடகயிலே குறுகி ஞரே. 35

---

34. நாவற் போதகம் - திருவாவலூரில் அவதரித்த ஆனேபோல்வாராகிய சுந்தரர் பெருமான்.

35. பொதியில் - பொதியமலே　வீய - கெட.

## தண்டியடிகள் நாயனுர் புராணம்

திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி
 சேராதார் குளந்தொட்டற்கு அமணர் சீறிக் .
குருடாநீ முன்செவிடுங் கூடிற் றென்று
 குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத் தங்கண்
அருளாலே விழித்தெவரு மந்த ராக
 அமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப்
பருவான கற்பறித்தா விக்கரையும் கட்டிப்
 பரனருளால் அமருலகம் பற்றி ஞரே. 36

## மூர்க்க நாயனுர் புராணம்

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
 தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க்கு அமுத ளிக்கும்
 கொள்கையினர் திருக்குடந்தை குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
 வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்பு நாமம்
எண்டிசையு மிகவுடையார் அண்டர் போற்றும்
 ஏழுலகு முடனுளு மியல்பி ஞரே. 37

---

36. காட்சி சேராதார் - பார்வையற்றவர். தறி - அணைக்கு உதவும் மரம். ஆவி - குளம். ( வாவீ )

37. அண்டர் - தேவர்.

## சோமாசிமாற நாயனர் புராணம்

அம்பர்நகர் அந்தணர்சோ மாசி மாறர்
அன்பர்களாம் யாவர்க்கும் அன்பினமு தளிப்பார்
உம்பர் நிகழ் வகையாகம் பலவும் செய்யும்
உண்மையினர் ஐந்தெழுத்தும் ஓவா நாவார்
நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்று
நாவலர்கோன் அடிபரவு நன்மை யாலே
இம்பர்தொழ உம்பர்பணிந் தேத்த மேலே
ஏழுலகு முடனுளு மியல்பி னரே. 38

## சாக்கிய நாயனர் புராணம்

சங்கமங்கை வரும்வேளாண் தலைவர் காஞ்சிச்
சாக்கியரோ டியைந்தவர்தம் தவறும் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந்து அந்த வேடம்
துறவாதே சிவலிங்கம் தொழுவோர் கண்டோர்
அங்கன்மலர் திருமேனி அழுந்தச் சாத்தி
அமருநாள் மறந்தொருநாள் அருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமளவில் மகிழ்ந்த நாதன்
திருவருளால் அமருலகம் சேர்ந்து ளாரே. 39

---

38. உம்பர் - தேவர். ஓவா - கெடாத. நம்பர் - நம்பிரானகிய இறைவர்.

39. துங்கம் - உயர்வு. அங்கல் மலர் - அழகிய கல் களாகிய மலர்கள்.

## சிறப்புலி நாயனுர் புராணம்

திருவாக்கூர் அருமறையோர் உலக மேத்தும்
சிறப்புலியார் மறப்புலியார் உரிமேற் செங்கண்
அரவார்த்தார் வருமேற்ருர்க்கு அன்ப ராஞர்க்கு
அமுதளிப்பார் ஒளிவெண்ணீ றணிந்த மார்பர்
பெருவாக்கால் மறைபரவி யாகம் போற்றும்
பெற்றியினர் ஐந்தெழுத்தும் பிறழா தோதிக்
கருவாக்கா இறைவன்தா ளிணைகள் சேர்ந்த
கருத்தினர் எனையாவுந் திருத்தி ஞரே. 40

## சிறுத்தோண்ட நாயனுர் புராணம்

பல்குமருத் துவரதிபர் செங்காட்டங் குடிவாழ்
படைத்தலைவர் அமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர் காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்வளரும் சீராளன் தன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
நன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமக வருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி ஞரே. 41

---

40. ஆர்த்தார் - கட்டியவர்.

41. நல்மதி - நல்லறிவு.

## சேரமான்பெருமாள் நாயனுர் புராணம்

காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக்
 கழறியவை யறிந்தகோச் சிலம்போசைக் கருத்தார்
நாவலர்கோன் நண்பரடிச் சேர னென்றே
 நவின்றுவரும் வண்ணுனே நயந்த கோநற்
பாவலர்கோப் பாணபத் திரனுல் வாய்ந்த
 பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்
மேவியகோ வானேக்குக் குதிரை வைத்த
 வீரர்கோ எனேயாளும் சேரர் கோவே. **42**

## கணநாத நாயனுர் புராணம்

கந்தமலி வயற்காழி மறையோர் ஏத்தும்
 கண நாதர் திருத்தோணிக் கடவு ளார்க்கு
நந்தவனம் பலவமைத்து மலரும் கொய்து
 நற்ருமஞ் சொற்ருமம் நயந்து சாத்தி
வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி
 வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப்
புந்திமகிழ்ந்து அரனருளாற் கயிலே மேவிப்
 பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி ருரே. **43**

---

*42. மகோதையார் கொடுங்கோளூர்;* **'கோ' என்ற** *சொல்லே அடுக்கிய அழகு காண்க.*

*43. சொல்தாமம் - சொல்மாலே;* **பாடல்கள்.** *நயந்து - பக்தியுடன். பொரு - ஒப்பு.*

## கூற்றுவ நாயனுர் புராணம்

குன்ருத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனுர் மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்ருமும் அடிவேண்டப் புலியூர் வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனிதன் ஈந்த
மன்ருடும் திருவடியே முடியாச் சூடி
மாநிலங்காத்து இறைவனுறை மாடக் கோயில்
சென்ருசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளால் அமருலகஞ் சேர்ந்து ளாரே. 44

## போய்யடிமையில்லாத புலவர் புராணம்

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலேகள் பொருந்த ஓதிச்
செய்யுளிடை வளர்ஆசு மதுர நல்ல
சித்திரம்வித் தாரமெனத் தெரிக்கும் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லா மன்றுளாடல்
மேவியகோன் இருதாளில் விரவச் சாத்திக்
கையுடையஞ் சலியினராய் அருளான் மேலேக்
கருதரிய அமருலகங் கைக்கொண் டாரே. 45

---

44. மாற்றலர் - பகைவர். புலியூர் - சிதம்பரம். பூசுரர் - தில்லேவாழ் அந்தணர்கள்.

45. 'பொய்யறியா' என்பது புலவர்களின் வாய்மை நலம் விளக்கிற்று. நாற்கவிகளின் பெயர்கள் ஓதப்பட்டன அஞ்சலி - வழிபாடு. தொடை - மாலே.

## புகழ்ச்சோழ நாயனர் புராணம்

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர்
போதகம்போல் என்னுயிரும் போக்கு மென்றே
அழலவிர்வாள் கொடுத்தபிரான் அதிகை மான்மேல்
அடர்ந்தபெரும் படையேவ அவர்கொண் டேய்ந்த
தழல்விழிகொள் தலைகாண்பார் கண்டதோர்புன்
சடைத்தலையை முடித்தலையால் தாழ்ந்து வாங்கிக்
கழல்பரவி யதுசிரத்தின் ஏந்தி வாய்ந்த
கனல்மூழ்கி இறைவனடி கைக்கொண் டாரே. 46

## நரசிங்கமுனையரைய நாயனர் புராணம்

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய
நரசிங்க முனையர்புவி நயந்து மன்றுள்
ஆடுமவர் ஆதிரை நாள் அடியார்க் கம்பொன்
அமுதளிப்பார் ஒளிவெண்ணீ றணிந்து தூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொ னீந்து
விடுத்தழகார் ஆலயங்கள் விளங்கச் செய்து
தோடலர்தார் உடையபிரான் அருளை யாளத்
தோன்றின ரெனையருளின் ஊன்றி னரே. 47

---

46. போதகம் - ஆனை. அவிர் - விளங்குதல்.

47. புவி - உலகம். தோடு - இதழ்கள். 'எனை அருளில் நிலைக்குமாறு ஊன்றியவர்' என்பது இறுதித் தொடரின் பொருள்.

## அதிபத்த நாயனுர் புராணம்

அலையாரும் கடல்நாகை நகருள் வாழும்
அதிபத்தர் பரதவர்கள் அதிபர் வேலை
வலைவாரி வருமீனில் தலைமீ னீசன்
வார்கழற்கே என்றுவிடு மரபார் பன்ளுள்
தலையான தொருமீனே சார நாளும்
தந்தொழிலால் விடுத்துமிடி சாரச் செம்பொன்
நிலையாரு மணிநயந்த மீனென் றெய்த
நீத்தருளால் இறைவனடி நேர்ந்து ளாரே. **48**

## கலிக்கம்ப நாயனுர் புராணம்

கடவுளருட் கண்ணுர்கள் பயிலுந் தொல்லைக்
கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பர் அன்பர்க்கு
அடிமையுற அமுதளிப்பார் அடியா னீங்கி
அருளுருவாய் அன்பருடன் அணைய ஏத்தி
இடையிலவர் அடியிணையும் விளக்கா நிற்ப
இகழ்மனைவி கரகமலி இரண்டு கையும்
படியில்விழ எறிந்தவள்செய் பணியுந் தாமே
பரிந்துபுரிந்து அரனருளே பற்றி னுரே. **49**

---

*48. மிடி - வறுமை. நேர்தல் - தலைப்படுதல்.*

*49. அருட்கண்ணுர்கள் - அருளே கண்ணுகக் காணும் அநுபவ ஞானியர்கள். பயிலுதல் - நிறைதல். பரிந்து - விரும்பி.*

## கலிய நாயனுர் புராணம்

தடமதில்சூழ் ஒற்றியூர் நகருள் வாழும்
சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார்
படர்புகழார் கலியனுர் நலியுங் கூற்றைப்
பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான் மற்ருேர்
உடலிலராய்ச் செக்குழல்வார்க்கு அதுவு நேராது
உயர்மனைவி யைக்கொள்வார் உளரு மின்றி
மிடறுதிர மகனிறைய வரிய நாதன்
வியன்கைகொடு பிடிப்பவருள் மேவி ஞரே. **50**

## சத்தி நாயனுர் புராணம்

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சி யூர்வாழ்
வேளாளர் சத்தியார் விமலர் பாதத்து
உரியவர்கள் அடிபரவும் ஒருமை யார்நா
ஒவாமே ஐந்தெழுத்தும் உரைக்கு நீரார்
இருளின்மிட றுடையபிரான் அடியார் தம்மை
இகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கி வாங்கி
அரியுமது திருத்தொழிலா உடையார் மன்றுள்
ஆடியசே வடிநிழல் அடைந்து ளாரே. **51**

---

*50.* தட - பெருமை. வியன் - சிறப்புடைமை என்க.

*51.* ஒருமை - ஒன்றித்த உள்ளம். ஓவாமே - தவிராமல். நீரார் - தன்மையினுர். தண்டாயம் - ஓர் ஆயுதம். கொடுந்தொழிலாயினும் அருள்குறித்தாதலின் 'தொழில்' எனக் கூருது 'திருத்தொழில்' என அடையடுத்துக் கூறப்பட்டது.

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார் புராணம்

வையநிகழ் பல்லவர்தம் குலத்து வந்த
மாமணிமா நிலமுழுதும் மகிழ்ந்து காக்கு
ஐயடிகள் காடவர்கோன் அருளா னூல்கள்
அறிந்தரசு புரிந்திடுதல் அமையு மென்றே
பொய்யனைய உடல்வாழ்வு கழியு மாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பாப் புலியூர் மேவுஞ்
செய்யதிரு வடிமுதலாப் பதிகள் தோறும்
செப்பினார் என்வினைகள் தப்பி னாரே. 52

## கணம்புல்ல நாயனார் புராணம்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழும்
இருக்குவே ளூரதிபர் எழிலார் சென்னிக்
கலைநிலவார் அடிபரவும் கணம்புல்லர் தில்லைக்
கருதுபுலீச் சரத்தரற்குக் காதல் தீப
நிலைதரத்தா மிடமிடியால் ஒருநாள் புல்லால்
நீடுவிளக் கிடஅதுவும் நேரா தாகத்
தலைமயிரில் எரிகொளுவும் அளவில் நாதன்
தாவாத வாழ்வருளும் தன்மை யாரே. 53

---

52. வினைகள் தப்பினார் - வினைகளை மாற்றியவர் என்றபடி. 'புகழ்வெண்பா' - ஐயடிகள் பாடிய திருத்தல வெண்பா நூல். செய்ய - சிவந்த.

53. சென்னி - சடைமுடி. நிலவார் - பிறையணிந்த சிவபிரான்.

## காரி நாயனுர் புராணம்

திருக்கடவூர் வருமுரவோர் காரி யாராம்
திகழ்தொண்டர் வண்டமிழ்நூல் திருந்த ஓதி
விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை
வேந்தரையும் முறைமுறையே மேவி யங்கண்
உரைத்தவுரை நயமாக்கி அவர்பால் ஏய்ந்த
ஒண்பொருளால் ஆலயங்கள் ஓங்கச் செய்து
தரைக்குளருந் தவர்க்கேவல் தகமுற் போற்றும்
தன்மையால் அருள்சேர்ந்த நன்மை யாரே. 54

## நின்றசீர்நெடுமாற நாயனுர் புராணம்

கன்னல்பலி நெல்வேலிக் கவினுர் மாறர்
கவுரியர்கோன் அமணருறு கலக்க மெல்லாம்
பொன்னெயில்சூழ் சிரபுரக்கோன் அணைய மாற்றிப்
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்து
மன்னுபுகழ் மங்கையருக் கரசி யாரா
மலர்மாது மணிமார்ப மகிழ்ந்து மாற்ருர்
வெந்நிடுதல் கண்டரசு புரிந்து காழி
வேந்தர்அருள் சேர்ந்தபெரு விறலி னுரே. 55

---

54. உரவோர் - அறிவாற்றலும், ஞானத்திறனும் உடையவர். காரிக்கோவை என்று தம்பெயரான் ஒரு கோவை நூல் செய்த நாயனுர் இவராதலின் 'விருப்பொடு தம்பெயரால் பா விளம்பி' எனப்பட்டது. தரைக்குள் - உலகுள்.

55. கன்னல் - கரும்பு. காழிவேந்தர், சிரபுரக்கோன் - சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தர். வெந்நிடுதல் - புறமுதுகு காட்டுதல்.

## வாயிலார் நாயனர் புராணம்

ஞாயிலார் மதில்தொண்டை நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் தொன்மை
வாயிலார் மலைவில்லான் அடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொன்
கோயிலா உயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியஆ னந்தமன்பே யமுதாக் கொண்டு
தாயிலான் இருசரண நிகழ வேத்தும்
தன்மையார் அருள்சேர்ந்த நன்மை யாரே. **56**

## முனையடுவார் நாயனர் புராணம்

பொன்னிவளம் தருநாட்டுப் புகழு நீடூர்ப்
பொருவில்திரு மலிவேளாண் தொன்மை மிக்கார்
முன்னியவர் முனையடுவார் இகலார் போரின்
முரணழிவார் தமக்காக மொழிந்த கூலி
மன்னுநிதி கொண்டுசயம் கொடுத்து வந்த
வளர்பொருளால் இறைவனடி வழுவா அன்பர்க்கு
அன்னமவர் நசையின்மிக மிசைய நல்கும்
அன்பர்துன்ப மவையாவு மகன்று ளாரே. **57**

---

56. ஞாயில் - மதில்உறுப்பு. மலைவில்லான் - மேரு மலையே வில்லாக உடைய சிவபிரான். தாய்இலான் - 'பிறவாயாக்கைப் பெரியோன்' ஆகிய சிவபிரான்.

57. பொரு - ஒப்பு. இகல் - மாறுபாடு. சயம் - வெற்றி. அன்னம் - சோறு. மிசைதல் - உண்ணுதல். நசை - விருப்பம்.

## கழற்சிங்க நாயனர் புராணம்

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
காதல்மிகு தேவியுடன் காவ லாரூர்
ஆடவல பெருமானைப் பணிவார் அங்கோர்
அகன்றமலர் தனைமோந்த அரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையார் அரியக் கேட்டுத்
திறலரசர் மலரெடுத்த செங்கை யென்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலங் காத்த
தூய்மையார் அருள்சேர்ந்த வாய்மை யாரே. 58

## இடங்கழி நாயனர் புராணம்

கோநாட்டுக் கொடும்பாளூர் இருக்கும் வேளிர்
குலத்தலைவர் இடங்கழியார் கொங்கிற் செம்பொன்
ஆனேற்றூர் மன்றின்முகடு அம்பொன் மேய்ந்த
ஆதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோ ரன்பர்
போநாப்பண் இருளின்கண் காவ லாளர்
புரவலர்முன் கொணரஅவர் புகலக் கேட்டும்
ஆனேற்றூர் அடியாரே கொள்க என்று
வழங்கியர சாண்டருளின் மன்னி னரே. 59

---

58. காடவர் - பல்லவர் குடிப்பெயர். ஆடவல பெருமான் - தியாகேசர். சூடகம் - வினைகள். தடித்தல் - துணித்தல்.

59. கொங்குநாட்டுச் செம்பொன். நாப்பண் - நடுவில். ஆன்ஏற்றூர் - விடையேறும் வித்தகனும் சிவபிரான்.

## செருத்துணை நாயனார் புராணம்

இரைத்தணையார் புனல்பொன்னி மருகல் நன்னாட்டு
எழிலாரும் தஞ்சைநகர் உழவர் ஏத்தும்
செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார்
செல்வமிகும் பல்லவர்கோன் தேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு
வளமலிபூங் கத்தியால் அவள்மூக் கீர்ந்த
கருத்துணையார் விறல்திருத்தொண் டிணையே செய்து
கருதலரும் அமருலகம் கைக்கொண் டாரே. **60**

## புகழ்த்துணை நாயனார் புராணம்

புண்ணியர்கள் புகழ்அழகார் திருப்புத் தூர்வாழ்
புகழ்த்துணையார் அகத்தடிமைப் புனிதர் சின்னாள்
மண்நிகழ மழைபொழியா வற்கா லத்தால்
வருந்துடலம் நடுங்கிடவும் மணிநீ ரேந்தி
அண்ணன்முடி பொழிகலச முடிமேல் வீழ
அயர்ந்தொருநாள் புலம்பஅரன் அருளால் ஈந்த
நண்ணலரும் ஒருகாசுப் படியால் வாழ்ந்து
நலமலிசீர் அமருலக நண்ணி னாரே. **61**

---

*60.* இரைத்து - ஆரவாரம் செய்து. அணை - தடுக்கப்பட்ட நீர். 'மருகல்நாட்டுத் தஞ்சை' - என்பது நோக்குக. மரு - மணம். கருதுணையார் - 'கருவினுள்ளும் துணையாக நிற்கும்' கடவுள்.

*61.* வற்காலம் - பஞ்சகாலம். 'மழை பொழிதலால் மண் நிகழும்' என்பது கருத்து.

## கோட்புலி நாயனர் புராணம்

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்
கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற் கூடு
நிலவணிவார்க் கமைத்தாணை நிறுத்தி ஒன்னர்
நேர்மலைவார் திருவாணை நினையா தேநெல்
சிலமிடியால் அழித்தபடி அறிந்து வாளால்
சேர்ந்தபெருங் கிளைஞர்உடல் சிதற வீசி
இலகுமொரு குழவியையும் எறிந்து நாதன்
எண்ணரிய கருணைநிழல் எய்தி னரே. 62

## பத்தராய்ப்பணிவார்கள் புராணம்

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்தல் அழகார்
துளங்கியஅர்ச் சனைபுரிதல் தொகுதி நியமங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்தல் ஈசன்
குணமருவும் அருங்கதையைக் குலவிக் கேட்டு
மண்டிவிழி துளும்பல்மயிர் சிலும்பல் உன்னல்
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
உண்டிகொளா தொழிதலென இவையோ ரெட்டும்
உடையரவர் பத்தரென உரைத்து ளாரே. 63

---

*62. குலவுதல் - நிறைதல். நிலவு அணிவார் - பிறை யணிந்த பெருமான்.*

*63. பத்தர்க்குரிய இயல்புகள் எட்டினை இப்பாடல் உரைக்கின்றது. மண்டி - நெருங்கி.*

## பரமனையேபாடுவார் புராணம்

அருந்தமிழால் வடகலையால் அருளா லொன்ருல்
அறிவுநெறி மருவும்அருங் கவிகள் யாவும்
திருந்தியவா னவர்பணிய மன்றுள் ஆடும்
தேவர்பிரான் கழலிணையே சேர ஓதி
விருந்திடுநா வுடையபயன் மேவி ஞர்தா
மேலானேம் எனமகிழ்ந்து விழிநீர் சோரப்
பரிந்தருளால் பரமனையே பாட வல்ல
பான்மையார் எமையாளு மேன்மை யாரே. 64

## சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணம்

பாரணவும் புலன்அந்தக் கரணம் ஒன்றும்
படராமே நடுநாடி பயிலும் நாதம்
காரணபங் கயன்முதலாம் ஐவர் வாழ்வும்
கழியுநெறி வழிபடவும் கருதி மேலைப்
பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப்
புணர்ந்தணைந்த சிவாநுபவ போக மேவும்
சீரணவு மவரன்றே எம்மை ஆளும்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே. 65

---

64. 'பரமனையே பாடுவார்' என்பதில் ஏகாரம் தேற்றம்; பரம்பொருளையன்றி வேறொருவரையும் பாடாத விறல் உடையார் என்றபடி.

65. அணவுதல் - விரைந்து செல்லல். அந்தக் கரணம் - உட்கருவியாகிய மனம் முதலிய நான்கு.

## திருவாரூர்ப் பிறந்தார் புராணம்

பொங்கியமா தவமுடையார் வருண நான்கின்
பொருந்தினர்கள் அல்லாத புகழின் உள்ளார்
சங்கையிலா அருந்தவமுன் புரிந்தா ரிங்குச்
சார்விலார் இறைவனருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியான் அருளை நீங்காக்
கணநாதர் எனவாழும் கருத்தர் கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழும் ஆரூர்ச்
சிறந்துளார் எமையாளப் பிறந்து ளாரே. 66

## முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார் புராணம்

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர்
சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி
ஒப்பில்திரு நீறணிந்து நியதி ஆற்றி
ஓவாமே ஐந்தெழுத்தும் உரைத்து மேன்மைத்
தப்பில்சிவா கமவிதியால் இன்பால் அன்பாம்
தன்மையால் நன்மையாம் தகையார் என்றும்
முப்பொழுதும் திருமேனி தீண்ட வல்ல
முறைமையார் பிறவிதெறும் திறமை யாரே. 67

---

*66. சங்கை - ஐயம். கருத்தர் - தலைவர்.*

*67. சிறுகால் - பெரும்புலர்காலை. தெறுதல் - சினத்தல்.*

## முழுநீறு பூசிய முனிவர் புராணம்

கற்பமனு கற்பமுப கற்பமென்று இக்
கடனணைந்த திருநீறும் கனற்கணீறும்
பொற்புடைய அரசனுசான் அங்கியாறு
பொல்லாத பூமியெதிர் புனிதலாகா
அற்புதமாம் திரிபுண்ட மதியின் பாதி
அகிலாங்கம் தீபமிகும் அழகார் வட்ட
முற்பொலிய உடலணியு முறையா ரன்றோ
முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே. 68

## அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்

தாராரு மூவேந்தர் பயிலும் தொல்லைத்
தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணம் சார்ந்த
சீராரும் தொண்டர்களும் அண்டர் ஏத்துந்
திருத்தொண்டத் தொகையருளால் செப்புங் காலத்து
ஏராரும் தொடையிலுரு திப்பால் அப்பால்
எந்தைபிரான் அடியடைந்த இயல்பி னோரும்
ஆராத காதலுடை யவர்க ளன்றோ
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார் தாமே. 69

---

68. கற்பம், மனுகற்பம், உபகற்பம் எனு மூவகைத் திருநீறு குறிக்கப்பட்டன.

69. சரணம் - திருவடிகள்.

## பூசலார் நாயனுர் புராணம்

பொருவருந்தண் டகநாட்டு நின்ற ஊர்வாழ்
பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே
இருநிதியம் தேடிஆ லயமு மாக்கி
எழுந்தருளப் பண்ணுவதா எண்ணுங் காலை
அரனதனைக் காடவர்கோற் கருள மன்னன்
அந்நகரம் அணைந்தவ்வா றறிந்து தாழ
விரவுமனக் கோயிலுற இருத்தி யங்கண்
வேண்டுவகொண் டிறைஞ்சியருள் மேவி ஞரே. **70**

## மங்கையர்க்கரசியார் புராணம்

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து
மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண்
சங்கைகெட அமண்சமயம் சாட வல்ல
சைவசிகா மணிஞானத் தமிழின் கோத்த
பொங்குதிரு வருளுடைய போத வல்லி
பொருவில்நெடு மாறனுர் புயமேல் வாழும்
செங்கலச முலையாள்தன் அருளால் இன்பம்
சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே. **71**

---

*70. நின்றஊர் - நின்றியூர். பூசுரர் - அந்தணர்.* இக் காடவர் கோன்-முதலாம் இராசசிம்மன் என்பர் ஆராய்ச்சி யாளர்.

*71.* சைவசிகாமணி - திருஞானசம்பந்தர். அவரது தமிழை 'ஞானத்தமிழ்' என்ற நுட்பம் நோக்குக. சாடு தல் - அழித்தல். போதம் - ஞானம். மண் - உலகு. "பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாள் தொறும் பரவ" - சம்பந்தர் வாக்கு.

## நேச நாயனுர் புராணம்

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை
 தாவாத புகழ்நேசர் தஞ்சொ லென்றும்
கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தை உன்னிக்
 கொண்டபொருள்அன்பர்கொளக்கொடுத்துவாழ்வார்
சீலமிகும் திருத்தொண்டர்க்கு உடையும் கீளுந்
 திருந்தியவெண் கோவணமும் சேர வந்து
பாலனைய ஒளிநீற்றன் பாதம் ஏத்திப்
 பரலோக முழுதாண்ட பான்மை யாரே. 72

## கோச்செங்கட்சோழ நாயனுர் புராணம்

வெண்ணுவல் இறைக்கொளிநூற் பந்தர் செய்த
 வியன்சிலம்பி அதுவழித்த வெள்ளா னைக்கை
உண்ணுடிக் கடித்தவுடல் ஒழியச் சோழன்
 உயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணுகி அவள்வயிற்றில் வைகிச் செங்கண்
 பெருமானுய்த் தென்னவராய்ப் பெருங்கோயில் பலவும்
கண்ணுர்வித் துயர்தில்லை மறையவர்க்கும் உறையுள்
 கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே. 73

---

72. *கோலுதல் - நிறுவுதல். கீள் - கீழ்உடை. பரலோகம் - சிவஉலகு.*

73. *பெண்ணுவல் இறை - திருவானைக்காவுடைய பெருமான். கண்ணுர்வித்தலாவது - கண்ணுக்கினிய காட்சியாய் நிறைவித்தல்.*

## திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுர் புராணம்

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ்
பேணுதிரு நீலகண்டப் பெரும்பாண ஞர்சீர்
நிறந்தருசெம் பொற்பலகை ஆல வாயில்
நிமலன்பால் பெற்ருரூர் நேர்ந்துசிவன் வாயில்
இறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி
அறந்திகழும் திருப்பதிகம் யாழி லேற்றி
ஆசில்திருப் பெருமணம்சேர்ந் தருள்பெற் ருரே. 74

## சடைய நாயனுர் புராணம்

சங்கையிலா அரன்மறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் தோழ ராய
எங்கள்பிரான் தவநெறிக்கோர் இலக்கு வாய்த்த
இசைஞானி யார்தனய ரெண்ணூர் சிங்க
மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி
வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கண்அரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி
விடையினர் அருள்சேர்ந்த சடைய ஞரே. 75

---

74. ஆசு - குற்றம். திருஞானசம்பந்தர் திருப்பதி கங்களை 'அறம் திகழும் திருப்பதிகம்' என்ற நுட்பம் உணரத்தக்கது.

75. தவர் - முனிவர். அதிபர் - தலைவர்.

## இசைஞானியார் புராணம்

நாவல் திருப்பதிக்கோர் செல்வச் சைவ
நாயகமாம் சடையனுர் நயந்த இன்பப்
பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
ஆவில்திகழ் தலைவன் வலிய ஆண்ட
ஆரூரர் அவதரிக்க அருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கும் எட்டாத இசைந்த இன்ப
இசைஞானி எனஞானம் எளிதா மன்றே. 76

அத்தரடி யவர்கூட்டத் தில்லை வாழும்
அந்தணர்பொய் யடிமையிலாப் புலவர் ஆசில்
பத்தர்முதல் எழுவரோடு ஒன்பதின்மர் ஏழொன்
பதின்மர் தனிப் பேரெண்ணேன் பதின்ம ராய
இத்தொகையிற் றெண்டர்சீ ருரைத்தான் வைத்த
ஈரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றும்
உத்தமநல் விருத்தத்திற் பயனும் செய்யுள்
உலகெழுபத் தைந்தென நின் றுரைக்கு மன்றே. 77

---

76. நாவல் திருப்பதி - திருநாவலூர்., நாயகம் - தலைமைபூண்டவர் என்றபடி. கொம்பு - பூங்கொம்பு போல்வார், பொற்பு - அழகு. 'இசைஞானி என்ற திருப்பெயரைக் கூறினலே ஞானம் எளிதாகும்' என்ற வாறு.

77. அத்தர் - தலைவர். இந்நூல் எழுபத்தைந்து பாடல்களான் ஆகியது.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையில் உள்ளார்
சிறந்ததனிப் பெயராக அறுபதின்மேன் மூவர்
மல்லன்மிகு கூட்டப்பேர் அருள் சேர்ந்தார்கள்
மாதவத்தோர் மும்மூன்று வகை பெற்றூர்கள்
இல்லறத்தும் துறவறத்தும் இருந்து வாழ்ந்தே
இயல்பாகச் சிவபதநான் கிசைந்தார் தம்மை
அல்லலறுத் தெனையாண்ட சைவ சிகாமணியார்
அருட்புலியூர் உமாபதியார் அருள்செய் தாரே. 78

திருத்தொண்டர் புராணசார முற்றிற்று

ஆக திருவிருத்தம் 78.

---

78. மல்லல் - ஞானவளம். இப்பாடலில் 'எனை ஆண்ட சைவசிகாமணியார் அருட்புலியூர் உமாபதியார் அருள்செய்தாரே' என்று வருவதால், இது உமாபதி சிவாசாரியாரிடம் பெரும்பக்தி கொண்ட பிற்காலப் புலவர் பாடியது என்று அறியலாம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருப்பதிகக் கோவை

ஒன்றுதி யோரெழுபத் தொன்றிருய் மூவர்தமிழ்
சென்றுர் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சரமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று
பதிகமொன்ரு நாற்பத்தொன் பதுபதிக மிரண்டாம்
உன்னுமிரு பதிற்றெட்டு நகர்பதிக மூன்ரு
மொருபதிஞேர் தலம்பதிக மொருநான்கென் றுணர்க

---

கடவுள் வாழ்த்து: கடக்கும் - கடந்து செல்லும், சரமுகம் - அம்பின் நுனி. நேர் - ஒத்த, காய்விழியான் - காயும் நுதற்கண்ணினனுகிய சிவபிரான். கடம் - மதம், 'குஞ்சரமுகன்' என்க.

1. பன்னுதல் - புகழ்ந்துரைத்தல், மன்னுதல் - நிலை பெறுதல்.

மன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக
மற்று மைந்து தலங்களுக்கு வருபதிகமாரும்
பின்னுமைந்து வளநகர்க்குப் பெறும்பதிக மேழாம்
பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மெட்டே. 1

பரவுமொரு நான்குதலம் பதினொன்றும் பதிகம்
பன்னுமிரு தலம்பதிகம் பன்னிரண்டாப் பகரும்
உரைசெயிரு தலம்பதிகம் பதினெட்டா மிப்பால்
ஒருமூன்று தலங்களுக்கிங் குறுபதிக முரைக்கின்
நிரவிவரு மறுநான்கு முப்பதிற்று நான்கு
நீடெழுபத் தொன்றுமென நிரனிரையா மாகக்
கருதுசிவ தலமிருநூற் றெழுபதிற்று நான்கு
கடைகாப்போ ரெழுநூற்று நாற்பதிற்ருென் பானே. 2

திருப்பழுவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாயில்
திருவைகா கோடிமாடச் செங்குன்றூர் வியலூர்
கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங்
காடுமயேந்திரப் பள்ளி கச்சினங்கன் ருப்பூர்
குரக்குக்கா பெரும்புலியூர் திருக்காட்டுப் பள்ளி
குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குடந்தைக்கா ரோணம்
எருக்கத்தம் புலியூர்வெண் டுறைகண்ணூர் கோயில்
இலம்பையங்கோட் டூர்சிக்க விராமனதீச் சுரமே. 3

பள்ளியின்முக் கூடல்திரு இரும்பூளை யாவூர்ப்
பசுபதீச் சரம்பாலைத் துறைபரிதி நியமம்
கள்ளில்குரங் கணின்முட்டம் திருமுருகன் பூண்டி
கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர்
புள்ளமங்கை நாட்டியத்தான் குடிகலைய நல்லூர்
புக்கொளியூ ரவிநாசி பூவனூர் துறையூர்
கொள்ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர்
கொட்டையூர் கொடுங்குன்றம் கூடலையாற் றூரே. 4

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர்
நெடுங்களம்வக் கரையிரும்பை மாகாளம் வடுகூர்
நெல்வெண்ணெய் வடகரைமாந் துறைதிருவிற் கோல
நீடூர்சக் கரப்பள்ளி யகத்தியான் பள்ளி
நெல்வாயில் பேணுபெருந் துறைநாலூர் மயானம்
நெல்லிக்கா விற்குடி வீரட்டமதி முற்றம்
வல்லமறை யணிநல்லூர் தலையாலங் காடு
வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே. 5

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை
சிற்றேமம் தெளிச்சேரி திருவுசாத் தானம்
கரவீரம் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர்
கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழகர்
அரசிலிதென் குடித்திட்டை வடமுல்லை வாயில்
அம்பர்ப்பெருந் திருக்கோயில் வெண்பாக்கம் சுழியல்
பெருமணமிந் திர நீல பருப்பதம் வேற்காடு
பேரெயில்பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே. 6

பறியலூர் வீரட்டம் கானூட்டு முள்ளூர்
பாதாளீச் சரம்எதிர்கொள் பாடிவலி தாயம்
சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூதூர்
திருப்புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீள்
நெறியரதைப் பெரும்பாழி ஊறல்கரு வூரா
னிலையிடும்பா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கடம்பந்
துறைதிருவே டகம் திருவஞ்சைக் களமாடானை
சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறையே. 7

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி
திருந்துதே வன்குடிமா கறல்சத்தி முற்றம்
திருவாப்ப னூர்மீயச் சூரவ்வூர் தன்னில்
திகழ்ந்ததிரு விளங்கோயில் வெஞ்சமாக் கூடல்

பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரை நன் னிலத்துப்
பெருங்கோயில் திருநணு திருப்பட்டீச் சுரமே
திருவீங்கோய் மலைவன்பார்த் தான்பனங்காட் டூரே
திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம் புரமே. 8

கடைமுடியே ஓணகாந் தன்றளிகோட் டூர்வை
கன்மாடக் கோயிலிடையாறு பழை யாறை
வடதளிநற் றினைநகரம் மோணமா மலைசீர்
வன்னியூர் கருவிலிய னேகதங்கா வதநல்
இடமேவு கடிக்குளநற் றிருக்களரென் றிவைகட்கு
இரும்பதிக மொவ்வொன்றென் றிசைத்திடுக இப்பாற்
குடவாயில் புனவாயில் தூங்கானை மாடம்
கோழம்ப மவளிவணல் லூர்கோலக் காவே. 9

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை
குற்றாலங் குடமூக்குக் கோட்டாறு பனையூர்
கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர்
கண்டியூர் வேதிகுடி கானூர் கோகரணம்
திருவாரூ ரரனெறிபந் தணை நல்லூர் நல்லம்
திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி
பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப்
பேர்திருமங் கலக்குடியாக் கூர்கோவ லூரே. 10

திருப்பரங்குன் றம்திருப்பா திரிப்புலியூர் குறுக்கை
திருப்புத்தூர் மணஞ்சேரி பாச்சிலாச் சிராமம்
கருப்பறிய லூர்கேதீச் சரம்திருக்கே தாரம்
கச்சிமேற் றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி

---

9. 'வைகல்மாடம்' என்பது வகையுளியால் பிரிந்து நின்றது.

அருத்தியுறு பட்டினத்துப் பல்லவனீச் சரம்பேர்
அன்பிலாலந் துறைப ராய்த்துறைவேட் களமிங்கு
உரைத்தசீ ரன்னியூர் ரிவ்விரண்டாம் பதிகம்
உள்ளதலங் கடவூர்ம யானம்வாஞ் சியமே. **11**

துருத்திதிரு நனிபள்ளி திருமருகல் திருப்பூர்
துருத்திபுறம் பயங்கடவூர் புள்ளிருக்கு வேளூர்
அரத்துறைவாழ் கொளிபுத்தூர் வான்மியூர் பாசூர்
அம்பர்மா காளமயிலாடுறுதுறை வாய்மூர்
திருக்கழுக்குன் றம்பாண்டிக் கொடுமுடிரா மேச்சரம்
செங்காட்டாங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி
பருப்பதம்புன் கூரரிசிற் கரைப்புத்தூர் சேறை
பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிக மூன்றே. **12**

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி
வலிவலம்சாய்க் காடுதிருக் கோடிகா நகரம்
நலந்திகழும் பூவணங்கோ ளிலிநின்றி யூரும்
நறையூர்ச் சித்தீச்சரமு நான்காகும் பதிகம்
வலஞ்சுழிநல் லூர்பழனம் ஆமாத்தூ ரண்ணு
மலைகடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தாம்
நிலந்திகழ்நா கேச்சரமாற் பேறுமழ பாடி
நெய்த்தானம் வெண்காடு நீள்பதிகம் ஆறே. **13**

கயிலாயம் ஆனைக்கா நள்ளாறு நாகைக்
காரோணம் திருச்சோற்றுத் துறையேழு புகலூர்
வயலாரும் கழிப்பாலை ஒற்றியூர் திருவா
வடுதுறையெட்டாம் தில்லை மறைக்காடு மதுரை
இயலாரு முதுகுன்றம் பதினொன்று கச்சி
ஏகம்பமிடை மருதீ ராறையா றதிகை
அயவீரொன் பான்வீழி யாரூர் சீகாழி
அறுநான்கு முப்பானுன் கெழுபத்தொன் றுமே. **14**

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருப்பதிக் கோவை

கோயில்திரு வேட்கள நெல்வாயில்கழிப் பாலை
குலவு பெரு மணமயேந்திரப்பள்ளி முல்லை
வாயில்கலிக் காமூர்சாய்க் காடுதிருப் பல்ல
வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி
தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா
தருக்கிளர் புள்ளிருக்குவே ளூர்கண்ணூர் கோயில்
ஞாயிலியல் கடைமுடியே நின்றியூர் புன்கூர்
நாடியநீ ரன்னியூர் வேள்விக் குடியே. 1

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் குறுக்கை
கருப்பறியலூர் கதியே காட்டுகுரக் குக்கா
மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிப்படிக் கரையே
வளருமோமாம் புலியூர் காளுட்டு முள்ளூர்

---

1. கோயில் - தில்லை. நெல்வாயில் - சிவபுரி என்றும், பெருமணம் - ஆச்சாள்புரம் என்றும், புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன்கோயில் என்றும் வழங்குகின்றன.

திருநாரை யூர்கடம்பூர் பந்தணை நல் லூர்பொன்
திகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே
திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து
தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. 2

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை
இயல்வைகா வூர்நல்வட குரங்காடு துறையே
பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம்
பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூர்
அன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே
ஆனைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராமம்
மன்னுமீங் கோய்மலையி னேடெறும்பான் மூன்றே
வடகரையிற் பதிதென்பால் வாட்போக்கி யாமே. 3

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடி மூக்கீச்சரம்
கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே
நெடுங்களமே லைக்காட்டுப் பள்ளியாலம் பொழில்சீர்
நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத்துறைமால்
அடும்வேதி குடிதென்குடித் திட்டை புள்ள
மங்கையணியார்சக் கரப்பள்ளி யருங்கருகா வூரே
படர்பாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனில்
பசுபதீச் சரம்சத்தி முற்றம்பட் டீச்சரமே. 4

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக்கு
அதனிற்கீழ்க் கோட்டங்கா ரோண நாகேச்சரம்
கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக்
குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழம்பம்
சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு வழுந்தூர்
சகம்புகழ்மா யூரம்விள நகர்பறிய லூரே
வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே
வியன்றலைச்சங் காடாக்கூர் விளங்குகட வூரே. 5

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே
தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டாறு
உரைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயின் மாகாளம்
உயர்மீயச் சூரிளங்கோ யில்திலதைப் பதிபூ
மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை
வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென்
கருத்துடைக்கு நறையூர்ச்சித் தீச்சரத்தோ டரிசிற்
கரைப்புத்தூர் சிவபுரமும் கலையநல்லூர் காணே. 6

கருக்குடிவாஞ் சியம்திருநன் னிலத்துப்பெருங் கோயில்
கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூர்
இருக்கும்வர்த்த மானேச்சர மிராமனதீச் சரமே
இயல்பயற்றூர் செங்காட்டங் குடிமருகல் இநளே
முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா ரோணம்
முன்திருச்சிக்கல் திருக்கீழ் வேளூர்தே வூரே
அரிக்கரியான் பள்ளியின் முக்கூடல் திருவாரூர்
அரனெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. 7

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர்
மிளிர்தலையா லங்காடு குடவாயில் சேறை
நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர்
நவிலுமிரும் பூளைதிரு வரதைப்பெரும் பாழி
மாலூரு மவளிவணல் லூர்பரிதி நியமம்
வாழ்வெண்ணி பூவனூர் பாதாளிச் சரநீர்ச்
சேலூரும் திருக்களர்சிற் றேமமுசாத் தானம்
திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே. 8

---

7. *அரிக்கு அரியான் - திருமாலுக்கும் அரியவனாகிய சிவபிரான்.*

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே
    தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு
கண்டருதெங் கூர்நெல்லிக் கா நாட்டி யத்தான்குடியே
    காருயில் கன்றுப்பூர் வலிவலங்கச் சினத்தோடு
அண்டர்பிரான் கோளிலிதென் திருவாய்மூர் மறைக்கா
    டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென் கரையில்
எண்டருநூற் றிருபத்தே ழிப்பாலீழத்தில்
    இசைகோண மாமலைகே தீச்சரமென் றிரண்டே. 9

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோடு
    அருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலினேடு
ஏலுமிரா மேச்சரமா டானை கானப்பேர்
    எழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம்
பாலலோ சனதிருநெல் வேலியோடு பாண்டி
    பதினன்கு மலைநாட்டி லஞ்சைக்களம் ஒன்றே
சீலமிகும் அவிநாசி திருமுருகன் பூண்டி
    திருநணு கொடிமாடச் செங்குன்றூர் தானே. 10

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின்
    மேவுமே ழரத்துறைவன் தூங்கானை மாடம்
எஞ்சலில் கூடலையாற் றூரெருக்கத்தம் புலியூர்
    இணையகலுந் தினைநகர்சோ புரமதிகை புகழே
விஞ்சுதிரு நாவலூர் முதுகுன்றம் திருநெல்
    வெண்ணெய்திருக் கோவலூர் அறையணி நல்லூரே
மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய்நல்லூர் துறையூர்
    வடுகூர்வீ டேயருளும் திருமாணி குழியே. 11

---

11. மஞ்சு - மேகம்.

தண்ணார் தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச்
சரம்புறவார் பனங்காட்டூர் திருவாமாத் தூரே
எண்ணரண் ணமலையு நடுநாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண்
கண்ணோங்கு மதில்ஓண காந்தன் றளி யனேக
தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே
உண்ணடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத்
தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே.

ஊறலிலம் பையங்கோட் டூர்விற்கோல மாலங்கா
டுயர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில் காளத்தி
மாறில்திரு வொற்றியூர் வலிதாயம் பாலி
வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை
ஈறில்திரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே
மாறில்திரு வக்கரையே யரசிலிதொல் விரும்பை
மாகாளம் தொண்டை நன்னுட்டெண்ணின் முப்பா
[னிரண்டே. 13

கோகரணம் துளுவதே யத்திலொன்றே இப்பாற்
குலவு பருப்பதநீல பருப்பதமம் பிகைதன்
பாகருறை யனேகதங்கா வதந்திருக் கேதாரம்
பகர்நொடித்தான்மலைவடக்கிற்பதியைந்தேஇவற்றேடு

---

*14.* அம்பிகை தன் பாகர் - மாதொரு பாகனும் சிவபிரான். தாகம் - ஞானதாகம். 'இன்பம் தரும் பூரணத்துக்கே தாகமுண்டாய் ஓடிவருங்காரணர்' - என்ற குருஞானசம்பந்தர் திருவாக்கைத் 'தாகமுடன் நினைப் போர்க்கு என்ற தொடருடன் ஒப்பிட்டு மகிழ்க. 'நினைப் போர்க்கும் துதிப்போர்க்கும் வினைகள் சாரா; பிறப்பு

ஆகவிரு நூற்றெழுபா னுன்கென்பர் மூவர்
அருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப்புத்
தாகமுடன் நினைப்போர்க்கும் துதிப்போர்க்கும் வினைகள்
சாராவாம் பிறப்பகலும் சத்தியமுத் தியுமே. **14**

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

அகலும்; முத்தியும் சத்தியம்' என வினை முடிவு செய்க. வினை நீக்கம், பிறவிக்கேடு, வீடுபேறு ஆகிய மூன்றும் உரைக்கப்பட்டன.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## அறுபத்துமூன்று நாயன்மார்

# திருநட்சத்திரம்

ஒன்றகல எட்டெட்டாம் ஓதுமடி யாரன்பால்
துன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி நாயகனார் பூமுடிமேல் ஆடுதிருச்
சன்னிதிவி நாயகனார் தாள்.

### நிலைமண்டலவாசிரியப்பா

தில்லைவாழ் அந்தணர் திருவருளால்அவர்
மல்குசீர்ப் பதத்தை மகிழ்வொடு வணங்கிக்

---

கடவுள் வாழ்த்து: 'எட்டெட்டாகிய அறுபத்து நான்கினுள் ஒன்று நீங்கிய அறுபத்து மூன்று என்னும் எண்ணை உடைய நாயன்மார்கள்' என்பது முதல்வரியிற் கூறப்பட்டது. பொன்னிதி - பொற்குவை விநாயகர். இதிற் குறிக்கப்பட்ட 'சன்னதி விநாயகர்' எத்தலத்தினர் என்பது விளக்கப்பட்டிலது.

வரிகள்

2. மல்கு - நிறைதல்.

கடிதிரு நீல கண்டர்தை விசாகம்
வடிவியற் பகையார் மார்கழி உத்திரம்
5 வருமிளை யான்குடி மாறர்ஆ வணிமகம்
கருதுமெய்ப் பொருளார் கார்த்திகை உத்திரம்
விறன்மிண்ட கண்டர் மேடம்ஆ திரைநாள்
அறனமர் நீதி ஆனிப் பூரம்
மாணெறி பத்தர் மாசியில் அத்தம்
10 காணும் ஏனாதியார் கன்னிஉத் திராடம்
மலர்கண் ணப்பர் மகரமான் தலையில்
குலவுகுங் குலியர் கோளரி மூலம்
தருமா னக்கஞ் சாறர்விற் சுவாதி
அரிவாட் டாயர்தை யாதிரை நாளில்
15 ஆனயர் கார்த்திகை யத்த நாளில்
கான மூர்த்தியார் கடகத் தாரல்
முருகர் இடப மூல மதனில்
உருத்திர பசுபதி உயர்கன்னி முன்னாள்
பொருந்திரு நாளைப் போவார்கன் னியிற்பார்
20 திருக்குறிப் படியார் சித்திரைச் சுவாதி

---

வரிகள்

*4.* கடி - விளக்கம்; புகழ் எனலாம்.

*7.* விறன்மிண்டர் பெயர் 'கண்டர்' என்று இணைந்து காணப்படுகின்றது.

*19.* 'பொருந்து' என்பதன் ஈறு செய்யுளாதலின் தொக்கது போலும்.

சண்டீச ராமவர் தையுத்தி ரத்தில்
தண்டமி ழப்பர் தகரில் சதயம்
குலச்சிறை நாயனுர் கோளரி யனுடம்
அலகில் குறும்பர் ஆடியிற் சித்திரை
25 அருள்கா ரைக்கா லம்மைமீன் விளக்காம்
அருகிலப் பூதிதை யதிற்சத யத்திற்கு
அமைநீல நக்கர் காளை மூலத்தின்
நமிநந்தி யடிகள் நாள்விடைப் பூசம்
ஞான சம்பந்தர் நாள்விடை மூலம்
30 மான கலிக்காமர் ஆனி ரேவதியில்
அருட்டிரு மூல ரைப்பசி முன்னுள்
வருதண்டி யடிகள் வளர்மீன் சதயம்
சேமமா மூர்க்கர் தேண்மதி மூலம்
சோமாசி மாறர் தொழுவிடை யரவில்
35 சாக்கிய நாயனுர் தனுப்பூ ராடம்
தேக்கிய சிறப்புலி தேட்பூ ராடம்
சேர்சிறுத் தொண்டர் சித்திரைப் பரணி
சேரமான் கடகம் சேர்ந்தசோ தியினில்

---

வரிகள்

22. 'தண்தமிழ் அப்பர்' என்ற அடைமொழிச் சிறப்பு உணரத்தக்கது.

24. அலகு - அளவு.

30. மானம் - பெருமை.

36. தேக்கிய - ஞானம் நிறைந்த.

கணநாதர் மீனம் கலந்தஆ திரையில்
40 குணமாம் கூற்றுவர் குளிர்மதி யாதிரை
பொய்யடிமை யில்லாப் புலவர்தாள் போற்றி
மெய்ப்புகழ்ச் சோழர் மிளிர்குளி ராரல்
நரசிங்க முனையார் நற்கன்னி சதயம்
திரவதி பத்தர் சிங்கவா யிலியம்
45 கலிக்கம்பர் மகரக் கடைநா ளதனில்
கலியரா டியினில் கலந்தவிந் திரனுள்
தூயசிற் சத்தியார் துலாப்பூ சத்தில்
ஐயர்கா டவர்கோ னைப்பசி மூலம்
கணம்புல்ல நாயனுர் கார்த்திகை யங்கி
50 கணஞ்சேர் காரியார் கடம்பூ ராடம்
தூய்நெடு மாறர் துலாமதிப் பரணியில்
வாயிலார் நாயனுர் மார்கழி இரேவதி
வெம்முனை யடுவார் மீனப் பூசம்
செம்மைநா கங்கழற் சிங்கர்சேப் பரணி
55 மருவிடங் கழியார் மதிதுலா ஆரல்
செருத்துணை நாயனுர் சிங்கப் பூசம்
சேட்புகழ்த் துணையார் சிங்கவா யிலியம்

---

வரிகள்

*42.* 'புகழ்' என்பதன்முன் 'மெய்' என்பது இணைந்து, அவரது புகழே உண்மையான புகழ் என்பதை உணர்த்துகின்றது.

*44.* 'திறம்' என்பது எதுகை நோக்கித் 'திரம்' என்ருயது.

கோட்புலி நாயனுர் குளிர்மதி கேட்டை
பத்தராய்த் தாழ்வார் பரமனைப் பாடுவார்
60 சித்தத்தைச் சிவன் பாலே சேர்த்துளார்
அப்புறு செய்த்திரு வாரூர்ப் பிறந்தார்
முப்பொ ழுதும்திரு மேனி தீண்டுவார்
முப்புவி தொழுமுழு நீறு பூசுவார்
அப்பாலு மடிச்சார்ந் தாரை வணங்கிப்
65 பூசலா ரைப்பசி புகுமனு டத்தின்
மாசிலா மானியார் மைம்மதி யுரோகிணி
மிகுசிவ நேசர் மீனரோ கிணியின்
தொகுபுகழ்ச் செங்கட் சோழர் குடக்குன்று
அடுநீலகண்ட யாழ்ப் பாணர்சே மூலம்
70 சடையனுர் மார்கழி சார்ந்தவா திரையில்
இசைஞானி மேடத் திசைந்த சித்திரையில்
வசையிலா விம்மதி மருவுமிந் நாளிற்
பரகதி யடைந்த பத்தரைப் பாடிக்
கருதுவன் ஞெண்டர் கடகச் சுவாதி
75 குருபூசை நாளின் குறைவிலா திவர்க்கு
வருபூசை தந்தோர் மாநிலத் தோங்கித்
தவப்பய னெய்திச் சதுமறைக் கிரியின்
சிவகதி யடைதல் திண்ணம் உண்மையதே.

---

வரிகள்

*61. அப்பு - நீர்; செய் - வயல்; உறுதல் - மிகுதல்.*

*78. 'சிவகதி அடைதல் திண்ணம்' என்றும் 'அது உண்மையே' என்றும் பயன் உரைக்கப்பட்டது.*

## தனிப் பாடல்கள்

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன் றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர் நல் லானிமகம்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசம் சிறந்தனரே.

சித்திரை யத்தம் உமாபதி யாவணித் திங்கள்தனில்
உத்திரம் சீர்கொண் மறைஞான சம்பந்தர் ஓதுகன்னிச்
சுத்தமெய்ப் பூரம் அருணந்தி ஐப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருநட்சத்திரம் முற்றிற்று.

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

உ

சிவமயம்



## சமயகுரவர் நால்வர் வயது

அப்பருக் கெண்பத்தோன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டினில் தெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்கு
அந்தம் பதினா றறி.

விலை ரூ.0.50